# தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள்

## தொகுதி - III

ஆசிரியர்கள்

முனைவர் **செ. சாந்தலிங்கம்**

**நாக. கணேசன்**

**இரா. ஜெயராமன்**

பதிப்பாசிரியர்

முனைவர் **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்**, இஆப.,

முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்

வெளியீடு

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை

சென்னை - 600 008

2010

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title | : | TAMILNADU INSCRIPTIONS -Vol. III |
| Editor | : | Principal Secretary &Commissioner |
| Copy right | : | T.N. State Dept. of Archaeology |
| Subject | : | History |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Publication No | : | 214 |
| No. of Copies | : | 1000 |
| No. of Pages | : | 265 |
| Type Point | : | 12pt |
| Paper used | : | 80 GSM Maplitho |
| Printer | : | The Chennai Printers Industrial Co-operative Society Ltd. 6, Pycrofts Road, Triplicane, Chennai - 600 005 Ph : 28446287/89 |
| Publisher | : | State Dept. of Archaeology Tamil Valarchi Valaagam Halls Road, Egmore Chennai - 600 008. |
| Price | : | Rs. 80/- |

[தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள் – 2004, தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள் – 2005 ஆகிய இரு தொகுதிகளை அடுத்து இந்நூல் தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள் தொகுதி – III எனும் பெயரில் வெளியிடப்படுகிறது]

# பொருளடக்கம்



முன் அட்டை : மதனகோபாலசுவாமி கோயில் விமானம் - பெரம்பலூர்
பின் அட்டை : 1. செக்கு கல்வெட்டு - பழைய ஜெயங்கொண்டசோழபுரம்
2. கருவூர் ஐவர் கல்வெட்டு - கருவூர்




முனைவர் **தி.ஸ்ரீ. ஸ்ரீதர்,** இ.ஆ.ப.,
முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்

தொல்லியல் துறை,
தமிழ் வளர்ச்சி வளாகம்,
ஆல்சு சாலை,
சென்னை - 600 008.

நாள் : 23-3-2010

# பதிப்புரை

தமிழகத் தொல்லியல் ஆய்வுத்துறை தமிழ்நாட்டிலுள்ள கல்வெட்டுகளைப் படி எடுத்துப் படித்து வெளியிடும் பணியினைத் தொடர்ந்து மேற்கொண்டு வருகிறது. கல்வெட்டு முனைப்புத் திட்டம் என்னும் திட்டத்தின்படி அண்மைக் காலங்களில் தீவிர கள ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு இதுவரை வெளிவராத கல்வெட்டுகள் பலவற்றையும் வெளிக்கொணரும் முயற்சியில் எம்துறை கணிசமான முன்னேற்றத்தை எட்டியுள்ளது. பல புதிய கல்வெட்டுத் தொகுதிகள் தற்போது வெளியிடப்பட்டு வரலாற்று ஆய்வாளர்களின் வரவேற்புக்குள்ளாகியுள்ளன. அந்த வரிசையில் தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள் தொகுதி மூன்று தற்போது வெளிவருகிறது. இது எம் துறையின் 214-வது வெளியீடாகும்.

இத்தொகுதியில் பெரம்பலூர் மாவட்டம், கரூர் மாவட்டம், திருநெல்வேலி மாவட்டம் ஆகிய பகுதிகளில் படியெடுத்து படிக்கப்பட்ட 145 கல்வெட்டுகள் இடம்பெற்றுள்ளன. சோழர், பிற்காலப்பாண்டியர், விசயநகரர், மதுரை நாயக்க மரபினர், அரியலூர் மழவராயர் எனப் பல மரபினரின் கல்வெட்டுகள் இத்தொகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. கோயில் கொடைகள், வணிக நிறுவனங்களின் சமூகப் பணிகள், சிற்றரசர்கள் தத்தம் பகுதி சமய நிறுவனங்களின் வளர்ச்சியில் காட்டிய அக்கறை போன்ற செய்திகள் இக்கல்வெட்டுகளின் மூலம் பெறப்படுகின்றன.

இக்கல்வெட்டுகளைப் படி எடுப்பதிலும், படித்து நூலாக்கம் செய்வதிலும் எம்துறையின் கல்வெட்டுப்பிரிவு அலுவலர்கள், தொல்லியல் அலுவலர்கள் பலரும் உழைத்துள்ளனர். இக்கல்வெட்டுத் தொகுதிப் பணியினை மேற்கொண்ட திருநெல்வேலி

தொல்லியல் அலுவலர் முனைவர் சொ. சாந்தலிங்கம், கரூர் அகழ்வைப்பக் காப்பாட்சியர் திரு. நா. கணேசன், இளநிலைக் கல்வெட்டாய்வாளர் இரா. ஜெயராமன் ஆகியோருக்கு எனது மனமார்ந்த பாராட்டுகள். மேலும் இந்நூலினை டி.டி.பி. செய்து அட்டைப்படம் வடிவமைத்த திருமதி கோ. கீதா, திருமதி ச. சரஸ்வதி மற்றும் எம்துறையின் அச்சுப்பிரிவினர் தங்களது பங்களிப்பினை நல்கியுள்ளனர். இவர்கள் அனைவரையும் நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

இவ்வெளியீட்டிற்கு வேண்டிய நிதிநல்கையினை வழங்கிய தமிழ்நாடு அரசிற்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழக வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்யும் வகையில் தொடர்ந்து வரலாற்று ஆய்வுகளில் ஈடுபட்டு வரும் ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் வழக்கம் போல இப்புதிய வெளியீட்டையும் வரவேற்பார்கள் என்பது எனது ஆழ்ந்த நம்பிக்கை.

தி. ஸ்ரீ. ஸ்ரீதர்

# முன்னுரை

இத்தொகுதியில் பெரம்பலூர், கரூர், திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களில் படி எடுக்கப்பட்ட கல்வெட்டுகள் இடம்பெற்றுள்ளன. பெரம்பலூர் மாவட்டம் பெரம்பலூர் வட்டத்தில் மட்டும் 80 கல்வெட்டுகளும் கரூர் மாவட்டத்தில் குளித்தலை, அரவக்குறிச்சி, கரூர், கிருஷ்ணராயபுரம் ஆகிய வட்டங்களிலிருந்து 26 கல்வெட்டுகளும், திருச்சி மாவட்டம் துறையூர் வட்டக்கல்வெட்டுகள் இரண்டு, தொட்டியம் வட்டக் கல்வெட்டு ஒன்று, வேடசந்தூர் வட்டக்கல்வெட்டுகள் இரண்டு ஆக 31 கல்வெட்டுகள் இடம் பெற்றுள்ளன. திருநெல்வேலி மாவட்டத்தில் பாளையங்கோட்டை வட்டம் மேலநத்தம் கிராமத்திலிருந்து 26 கல்வெட்டுகளும், திருச்செந்தூர் வட்டம் வீரபாண்டியன்பட்டினம் கல்வெட்டு ஒன்று, ராதாபுரம் வட்டம் சமூகரெங்கபுரம் கல்வெட்டுகள் 2, பாளையங்கோட்டை வட்டம் குறிச்சி கல்வெட்டு ஒன்று, திருநெல்வேலி வட்டம் வல்லபன்கோட்டை கல்வெட்டுகள் இரண்டு, சங்கரன்கோயில் கல்வெட்டு ஒன்று, ஸ்ரீவைகுண்டம் வட்டம் வசவப்பபுரம் கல்வெட்டு ஒன்றும் ஆக 34 கல்வெட்டுகள் இடம்பெற்றுள்ளன. மொத்தம் 145 கல்வெட்டுகளைக் கொண்ட இத்தொகுதி பலவகையான வரலாற்றுச் செய்திகளை ஆய்வு உலகத்திற்கு வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன.

## பெரம்பலூர் வட்டக் கல்வெட்டுகள் :

தமிழக வரலாற்றில் அதிகம் அறியப்படாத பகுதியாக ‘நடுநாடு’ என்னும் பெயரில் வழங்குவது இப்பகுதி. இங்கு கிடைத்துள்ள கல்வெட்டுகளைத் தொகுத்து வெளியிடுவதன் மூலம் வரலாற்றில் புதிய வெளிச்சம் பாய்வதற்கு வாய்ப்பாக அமையும்.

பெரம்பலூர் நகரத்தில் அமைந்துள்ள மதனகோபால சுவாமி கோயிலிலிருந்து 10 கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டுள்ளன. இவற்றில் பெரும்பான்மையானவை பிற்பாண்டியர் காலக் கல்வெட்டுகளாகும்.

ஜடாவர்மன் முதலாம் சுந்தரபாண்டியன் காலக்கல்வெட்டுகளில் அவனது பிறந்த நாள் கொண்டாட்டங்களுக்காக இக்கோயிலுக்கு 24 வேலி நிலமும், அவன் தமக்கையின் பிறந்த நாளுக்காக 12 வேலி நிலமும், கொடையளிக்கப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது. மேலும் இதே அரசன் நொச்சியம் என்னும் கிராமத்தையும் தன் பிறந்த நாள் வழிபாட்டிற்காக இக்கோயிலுக்குக் கொடுத்துள்ளான். விசயநகர அரசர் காலத்தில் தம்மியப்ப நாயக்கரின் பிரதிநிதியான இரமஞ்சி துலுக்கநாயக்கர் என்பவர் இக்கோயிலில் நவகிரக பூசைக்காக நிலக்கொடை கொடுத்துள்ளார். இதன் மூலம் தமிழ்நாட்டில் நவகிரகபூசை வழக்கத்திற்கு வந்த காலம் பற்றிய அரிய செய்தி வெளிப்படுகிறது.

(கிபி. 1510). இதே சமகாலத்து மற்றொரு கல்வெட்டில் நொச்சியம் கிராமம் சர்வமானியமாக இக்கோயிலுக்கு வழங்கப்பட்ட செய்தியும் பெறப்படுகிறது. கி.பி. 12-ஆம் நூற்றாண்டளவில் இக்கோயிலில் 'வீரபயங்கரன் மண்டபம்' என்று ஒரு மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

அசூர் என்னும் ஊரில் உள்ள விசயநகர அரசர் இரண்டாம் தேவராயரின் கல்வெட்டு (கி.பி. 1428) இப்பகுதியில் வாழ்ந்த வலங்கை 98, சாதிகளைச் சேர்ந்த மக்கள் ஒன்று கூடி தங்களது விளைபொருள்களுக்கு ஏற்கனவே வழக்கத்தில் உள்ள வரிகளையே அரசுக்குச் செலுத்துவது என்றும், புதிய வரிகளைச் செலுத்துவதில்லை என்றும் முடிவு எடுத்த செய்தியைத் தருகிறது. இவ்வூரின் மற்றொரு கல்வெட்டு இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்திய நிலக்கொடை ஒன்றைக் கூறுகிறது. இலுப்பைக்குடியில் காணப்படும் மதுரை நாயக்கர் காலக்கல்வெட்டு சொக்கநாத நாயக்கர் பெயரால் அமைந்த சத்திரம் ஒன்றுக்கு வழங்கப்பட்ட கொடையைக் கூறுகிறது. இதன் மூலம் மதுரைநாயக்கர் ஆட்சி பெரம்பலூர்ப் பகுதிவரை பரவியிருந்தது என்பதை அறியமுடிகிறது.

கோயில்களில் விளக்கு எரிப்பதற்கு ஆகும் செலவை, அவ்வூர் குளக்கரைகளில் வளர்க்கப்படும் பல்வகை மரங்களின் வருவாய் மூலம் ஈடுகட்டப்பட்டது என்ற செய்தியை இறையூர் கல்வெட்டு ஒன்று தருகிறது. இதே போன்ற செய்தியை கீழப்புலியூர் கல்வெட்டு ஒன்றும் தருகிறது. கி.பி. 18-19 -ம் நூற்றாண்டளவில் இப்படி ஊர் மக்கள் செயல்பட்டுள்ளனர்.

கொத்தவாசல் என்னும் ஊர்க்கல்வெட்டு முதலாம் இராசேந்திரசோழன் காலத்தில் கொடுக்கப்பட்ட நிலக்கொடை பற்றிய செய்தியைத் தருவதோடு இவ்வூர் பராந்தகச் சதுர்வேதிமங்கலம் என்ற பெயரில் தனியூர் என்னும் சிறப்புத்தகுதி பெற்றிருந்தது என்றும் தெரிவிக்கிறது. இது ஒரு தனித்துவம் வாய்ந்த கல்வெட்டு எனலாம்.

கொளக்காநத்தம் ஊர்க்கல்வெட்டு திருமலைநாயக்கரின் நன்மைக்காக அவனுடைய தளவாய் இராமப்ப அய்யன் 1000 குழி நிலதானம் அளித்ததாகவும், அத்தானம் கோயில் திருப்பணிக்கும், பூசை செலவுகளுக்குமாக வழங்கப்பட்டது என்றும் தெரிவிக்கிறது. இவ்வூரில் காணப்படும் மூன்றாம் ராஜராஜ சோழன் காலக் கல்வெட்டு அரையன் தேவனான வாணவிச்சாதிர நாடாழ்வான் என்பவன் ஒரு கலிங்கு அமைத்த செய்தியையும், அவன் சுருதிமான் என்றும் வகுப்பைச் சேர்ந்தவன் என்றும் கூறுகிறது. இப்பகுதியில் சோழர் ஆட்சியின் இறுதிக்காலத்தில் சுருதிமான், நத்தமான் என்னும் புதிய சமூகத் தலைவர்கள் உருவானதும், அவர்கள் பின்னர் இவ்வட்டாரத்தின் அரசியலில் செல்வாக்குப் பெற்றமையும் வரலாறு கூறும் செய்தியாகும்.

தழுதாழை என்னும் ஊர்க்கல்வெட்டுகள் இரண்டாம் ராசராசன், மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் ராசராசன் ஆகியோர் காலத்தில் இப்பகுதி ஆறகளூரின் தலைவனும் மகதைநாடாழ்வான் என்னும் தகுதியில் ஆண்ட வாணகோவரையர் பற்றிய செய்திகளைத் தருகின்றன.

நன்னை என்னும் ஊர்கல்வெட்டுகள் இங்குள்ள கோயில் பிற்காலச்சோழர் காலத்தில் பராமரிக்கப்பட்ட விதத்தையும், பின்னர் அரியலூர் பாளையக்காரர் ரங்கப்ப மழவராயர் காட்டிய அக்கறையையும், இலுப்பை மரங்கள் வளர்ப்பதன் மூலம் இக்கோயிலை தொடர்ந்து பாதுகாத்த தனிமனிதர்கள் பற்றிய செய்தியையும் விளக்குகின்றன.

மூங்கில்பாடி கிராமத்தில் காணப்படும் மூன்று கல்வெட்டுகளில் ஒன்று பிற்சோழர் காலத்தில் விக்கிரமசோழ மலயகுலராயன் என்னும் தலைவனால் திருமால்கோயில் ஒன்று கட்டப்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. மற்ற இரண்டு கல்வெட்டுகள் இவ்வூரில் அரியலூர் பாளையக்காரர் கிருஷ்ணப்ப மழவராயர் செய்த தர்மங்களைக் கூறுகிறது.

ஜடாவர்மன் இரண்டாம் குலசேகரபாண்டியன் காலத்தில் வரகூர் சிவலோகநாதர் கோயிலில் வரகூர் பெருங்கொல்லன் உதயன் பெரியநாயகன் என்பவன் சூலதேவர் செப்புத்திருமேனியைச் செய்து கொடுத்தான். முன்னர் இவனது தாத்தா வழங்கிய திருமேனி ஏதோ கலகத்தில் காணாமல் போனதால் பெயரன் புதிய திருமேனி செய்து கொடுத்துள்ளான். மங்கூர், வெண்பாவூர் என்னும் ஊர்களில் காணப்படும் கல்வெட்டுகள் கி.பி. 17-ஆம் நூற்றாண்டளவில் இப்பகுதியில் ரெட்டியார் சமூக மக்கள் ஆற்றிய அறப்பணிகளாப் பற்றிய செய்திகளைத் தருகின்றன.

வெண்பாவூர் கல்வெட்டுகள் இப்பகுதியில் வாணகோவரையர் என்னும் சிற்றரச மரபினரால் கோயிலுக்கு வழங்கப்பட்ட கொடைகள் பற்றிக் கூறுகின்றன. பொன்பரப்பின ஈஸ்வரம், தாயினும் நல்ல விண்ணகராழ்வார் என்ற இரண்டு கோயில்கள் இவ்வூரில் இருந்தன. திருமால் கோயில் பின்னாளில் சித்திரமேழி மலைமண்டல தேசி விண்ணகர் என்று பெயர் மாற்றம் பெற்றுள்ளது. சித்திரமேழிப் பெரியநாடு என்னும் வேளாண் மக்களின் அமைப்பின் செல்வாக்கால் இவ்வாறு பெயர் மாற்றம் பெற்றுள்ளது.

கோயில்பாளையம் என்னும் ஊரில் முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் ராசராசன், மூன்றாம் குலோத்துங்கன் ஆகியோரின் காலக்கல்வெட்டுகள் உள்ளன. குன்றன்தேவி குலோத்துங்க சோழியார் என்னும் பெண் ஆடிப்பூரம் நாச்சியார் என்னும் இறைவியை எழுந்தருளச் செய்துள்ளாள். சோழர்களின் சிற்றரசர்களாக வாணகோவரையர் என்னும் வாணாதிராயர்கள் இப்பகுதியில் செய்த பணிகள் அறியப்படுகின்றன.

சித்தளி கிராமத்தில் மட்டும் பத்து கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டுள்ளன. மூன்றாம் இராசராசன் மற்றும் போசள மன்னன் வீரசோமேஸ்வரன் காலக்கல்வெட்டுகள் இவை. நிலக்கொடை, திருவிளக்குக் கொடைகள் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன. போசளா் காலத்தில இவ்வூா் தேவண்ண சதுர்வேதிமங்கலம் என்றும் பெயா் பெற்றுள்ளது.

சிறுகம்பூர் என்ற ஊரில் கிடைத்துள்ள உத்தமசோழன் கல்வெட்டு காலத்தால் முந்தியது (கி.பி. 10-ம் நூ.ஆ). இக்காலத்தில் இவ்வூர் ஜம்புலிங்கசுவாமி கோயிலில் மண்டபம் ஒன்று கட்டப்பட்டு அதற்கு உத்தமசோழன் திருமண்டபம் என்ற பெயரிடப்பட்டுள்ளது. இலுப்பை மரங்கள் வளர்த்து அதன் மூலம் கிடைக்கும் எண்ணையைக் கொண்டு கோயில் விளக்குகள் எரிக்கப்பட்டதை இவ்வட்டாரத்தில் பல கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

திருவாலந்துறையில் சுவையான செய்தி ஒன்று கல்வெட்டில் இடம்பெற்றுள்து. மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தில் இராராதேவன் வாணவ தரையன் என்னும் தலைவன் சித்திரை விழாவின் போது வழிபாடு செய்து கொண்டிருந்தான். அச்சமயம் பாம்பு ஒன்று அரச சபையில் புகுந்து விட்டது. தீயசகுனம் என்று இதனை நினைத்த தலைவன் பிராமணர்களை அழைத்து இதற்கு பரிகாரம் செய்யக் கேட்டான். அதற்கு அவர்கள் கோயிலுக்கு தேவதானமாகவும், பிராமணர்களுக்கு நிலதானமும் வழங்கினால் பரிகாரம் கிடைக்கும் எனக் கூறினர். அதன்படி அவன் தானங்களை வழங்கினான் என்ற செய்தி இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

பெரம்பலூர் வட்டக் கல்வெட்டுகள் மூலம் இப்பகுதியின் இடைக்கால வரலாறு (கி.பி. 12-17 -ஆம் நூ.ஆ. வரை) வெளிச்சம் பெறுகிறது. சோழ அரசின் இறுதிக் கட்டத்தில் ஹொய்சளர்கள், வாணகோவரையர் என்னும் சிற்றரசர்களின் செல்வாக்கு அதிகரித்துள்ளது. நாயக்கர் ஆட்சிக்குப் பின் அரியலூர் மழவராயர்கள் இப்பகுதியின் தலைவர்களாகச் செயல்பட்டுள்ளனர். பல கோயில்கள் புத்துயிர் பெற்றுள்ளன. சமூக வரலாற்றை ஆய்வு செய்யும் ஆர்வலர்களக்குப் பல அரிய செய்திகளைத் தரும் வகையில் இப்பகுதியின் கல்வெட்டுகள் உள்ளன.



# கரூர் மாவட்டக் கல்வெட்டுகள்

கரூர் மாவட்டக் கல்வெட்டுகளில் கெங்காளிபாளையம் நத்தமேட்டில் கிடைத்துள்ள சேரர் கல்வெட்டு கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. தென்னவன் வஞ்சிவேள் இரவிகுவாவன் என்பவனின் மனைவி கொடுத்த கொடை குறிக்கப்படுகிறது. கி.பி. 6-7 -ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வெள்ளியணைக் கல்வெட்டு சோழிய அரையன் அகணிதன் என்பவன் வெட்டுவித்த குளம் பற்றிக் கூறுகிறது. வேட்டமங்கலம் கிராமத்திலிருந்து மட்டும் பதினொரு கல்வெட்டுகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. கொங்குச் சோழ மன்னர்கள் வீரராசேந்திரன், விக்கிரமசோழன், பிற்பாண்டியரில் வீரபாண்டியன் ஆகியோர் காலக்கல்வெட்டுகள் இடம்பெறுகின்றன. இக்கல்வெட்டுகளின் மூலம் வேட்டுவர், கரடிவேட்டுவர், தச்சர், வேளாளர், தட்டார் எனப் பல சமூகத்தவர்களும் கோயிலுக்குக் கொடைகளும், விளக்குகளும் அளித்திருப்பதை அறியமுடிகிறது.

மேல்நங்கவரம் கிராமத்தில் கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் வளஞ்சியர் என்னும் வணிகக்குழுவினர் கல்வெட்டு ஆய்வாளர்களின் கவனத்தைப் பெரிதும் ஈர்க்கவல்லது. வணிகர்களின் சின்னங்களான பசும்பை, சிற்றுளி, அரிவாள், விளக்கு, வாள், கேடயம் துர்க்கை உருவம் ஆகியனவும் புடைச்சிற்பங்களாகக் காட்டப்பட்டுள்ளன. தோகைமலையில் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் குதிரை குத்திப்பட்ட வீரனுக்கு ஒரு நடுகல் எடுக்கப்பட்டது பற்றிய செய்தியும் ஒரு கல்வெட்டின் மூலம் பெறப்படுகிறது. குளித்தலை வட்டத்துக் கோட்டைப்பட்டி வணிகர்குழுக் கல்வெட்டு அதிகமான செய்தியைக் கொண்டிருக்கவில்லை. ஆயினும் இது ஒரு வணிகத்தலம் என்பதைச் சுட்டி நிற்கிறது. இவ்வட்டத்து இனுங்கூர் கல்வெட்டு மதுரை நாயக்கர்களின் ஆட்சி இப்பகுதிவரை பரவியிருந்தமைக்குச் சான்று கூறுகிறது. வடசேரிக் கல்வெட்டு கண்டராதித்த சோழன் காலத்தில் குளம் வெட்டிக் களம் அமைக்கப்பட்ட செய்தியைத் தாங்கி நிற்கிறது.

அரவக்குறிச்சி வட்டத்து ஆத்துமேடு கிராமத்தில் இசுலாமியர் ஒருவர் பள்ளிவாசலுக்கு நிலக்கொடை வழங்கினார் என்ற செய்தி ஒரு தமிழ்க் கல்வெட்டிலும், மற்றொரு உருது கல்வெட்டில் அவரது பெயரும் குறிக்கப்பட்டுள்ளன. இவ்வட்டத்தின் முன்னூர் கிராமக் கல்வெட்டில் வளஞ்சியர் பற்றிய செய்திகள் இடம்பெறுவதும் நோக்கத்தக்கது.

திருச்சி மாவட்டத்தின் துறையூர் வட்ட காளியாம்பட்டிக் கல்வெட்டு கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் அய்யாப்பொழில் ஐநூற்றுவர் என்னும் வணிகக் குழுவினரின் மெய்க்கீர்த்தியை மட்டும் தருகிறது. தொட்டியம் வட்டத்து நாகைநல்லூர்க் கல்வெட்டு கோமுந்நூற்றுவர், ஐம்பெருங்குழு என்னும் மிக முக்கியமான குறிப்பைத் தருகிறது. செய்திகள் முழுமையாக இல்லை.

♡♡♡

# திருநெல்வேலி மாவட்டக் கல்வெட்டுகள்

இம்மாவட்டத்தில் படி எடுக்கப்பட்ட 34 கல்வெட்டுகள் இத்தொகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றில் 26 கல்வெட்டுகள் பாளையங்கோட்டை வட்டம் மேலநத்தம் கிராமத்தில் உள்ளவை. இவ்வூர் திருச்சாத்துனூர் நத்தம் என்று கல்வெட்டுகளில் பெயர் பெற்றுள்ளது. கீழ்க்களக்கூற்றத்து ஸ்ரீவல்லபமங்கலத்து மேல்பிடாகையாக இவ்வூர் அமைந்திருந்தது. இன்றைய பாளைங்கோட்டை நகரமே அக்காலத்தில் ஸ்ரீவல்லபமங்கலம் எனப் பெயர் பெற்றிருந்தது. முற்பாண்டியமன்னன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் பெயரால் இவ்வூர் அழைக்கப்பட்டிருக்கலாம். ஜடாவர்மன் குலசேகரன், முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆகியோர் காலக்கல்வெட்டுகள் அதிகமாக உள்ளன. நந்தா விளக்கு வைக்க ஆடுகள் கொடை அளிக்கப்பட்ட செய்தியே பல கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. மேலநத்தம் கோயிலின் (அக்னீஸ்வரம்) மகாமண்டபம் கி.பி. 13-ம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாக ஒரு கல்வெட்டு கூறுகிறது. மற்றொரு கல்வெட்டு இதே சமகாலத்தில் இக்கோயிலில் திருப்பணிகள் மேற்கொள்ளப்பட்டதைக் காட்டுகிறது. முருகன், நடராசர் திருமேனிகள் தனிச் சன்னதிகளில் இக்காலத்தில் வைக்கப்பட்டுள்ளன. நெல்லாகவும், காசாகவும், ஆடுகளாகவும் பல கொடைகள் வழங்கப்படுள்ளன.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் தேவரடியார் பெண் ஒருத்தி வைகாசித் திருவிழாவின் போது இரண்டு நாடகம் நடத்துவதற்காக 40 கலம் நெல் கொடையளித்த செய்தி குறியிடத்தக்கது.

திருச்செந்தூர் வட்டத்து வீரபாண்டியன் பட்டினம் கல்வெட்டு ஒன்று திருவிதாங்கூர் அரசர் உதயமார்த்தாண்டன் காலத்தியதாகும். இக்கல்வெட்டில் இவ்வூர் சோணாடு கொண்டான்பட்டினம் என்று பெயர் மாற்றம் பெற்றதாகவும், இவ்வூர் பள்ளிவாசல் உதயமார்த்தாண்டப் பெரும்பள்ளி என்றும் தலைமைக் காதியார் உதயமார்த்தாண்டக் காதியார் எனப்பட்டார் என்றும் அறியப்படுகிறது.

வல்லபன்கோட்டைக் கல்வெட்டு ஒன்று கி.பி. 9-10 -ஆம் நூற்றாண்டில் மாறன் சடையன் காலத்தில் அருத்துணைப்பெரும்பள்ளி என்றும் சமணப்பள்ளிக்கு வெண்புநாட்டு நால்கூரைச் சேர்ந்த ஒருவன் 50 ஆடுகள் வழங்கிய செய்தியைத் தருகிறது. மற்றொரு கல்வெட்டு 45 ஆடுகள் கொடையளிக்கப்பட்டதைத் தெரிவிக்கிறது.

சங்கரன்கோயில் நகரத்தில் காணப்படும் ஒரு கல்வெட்டு தேவதானமாக நிலக்கொடை வழங்கப்பட்டதைக் கூறுகிறது. இவ்வூரின் பெயர் ‘தனி உண்ணாதான் ஏந்தல்’ என்பது சுவையான தகவலாகும்.

வசவப்பபுரம் கல்வெட்டு சோழ மன்னன் முதலாம் இராசராசனின் மெய்க்கீர்த்தியைத் தருகிறது.

இவ்வகையில் முற்பாண்டியர், பிற்பாண்டியர், பிற்சோழர் எனப் பல மன்னர்கள் திருநெல்வேலி பகுதிகளில் அரசியல், சமூக, சமயப் பணிகளில் காட்டிய ஆர்வத்தை இக்கல்வெட்டுகள் வெளிப்படுத்தி நிற்கின்றன.



# Tamilnattuk Kalvettukal Vol III

## Introduction

This Volume consists of the inscriptions copied from some places from Perambalur, Karur and Tirunelveli districts. Eighty records from Perambalur Taluk are deciphered and included in this volume. Karur, Trichi and Dindigal district inscriptions are also find place here. 34 inscriptions copied from Thirunelveli district are also given in this volume. Totally 145 records are presented here which provide many interesting details regarding the socioeconomic and political history of Tamilnadu.

## Perambalur Taluk Inscriptions

This taluk is lessknown in the history of Tamilnadu which was named as. Nadunadu, in those days. By Publishing the records from this area some new light may be shed on the lesser known region.

MadhanaGopalaswamy temple at Perambalur town has ten inscriptions most of which belong to later Pandya period. The Records of Jatavarman Sundarapandya I state that 24 Veli extent of lands were donated for celebrating his birth day festival and 12 veli extent of lands for his sisters birth day festival. Moreover he donated Nocciyam village also for his birth day celebrations. Iramanji Tulukka Nayakar, the representative of Vijayanagara cheif Timmappa Nayakar endowed lands for the Navagraha Puja in this temple. From this record it is known that the Navagraha puja might have been introduced at this period (1510 A.D.) Another record mentions that Nocciyam village was donated as sarvamanya for this temple. One Virabhayankaran mantapam constructed during 12th century A.D. was recorded in three inscriptions.

Asur record belongs to Devaraya II (1428 A.D.) a Vijiayanagar Kings's Period Provides an interesting information regarding the Valangai 98 social groups of people. Both these people assembled unitedly and resolved to pay the taxes inpractice for their agriculture products and refuse to pay the new taxes if any lived by the Government. Endowment of lands during Kulothunga II period was recorded in another document.

Iluppaikudi inscription reveals that one choultry was constructed during Chockanatha Nayak period. From this record it is known that the rule of Madurai Nayak was extended upto Perambalur region.

During 18-19th Century. some village people had arranged some facinating procedures to meet out the temple lighting expenses. They planted variety of trees on the bunds of watertanks near the temples and from their yeilds they lighted lamps in the temples. Inscriptions from K. Iraiyur and Kilapuliyur village provide this information.

Koththavasal inscription dated to Rajendra chola I period denotes some land donation. This village was named as Parantaka chaturvedhimangalam and attained a special status called as Taniyur. Emergence of Taniyurs during chola period is an interesting socio-economic study which attracted many scholars already.

One record copied at Kolakkanatham village, mentions that 1000 kuli extent of land was donated by Dalvai Ramappa Ayyan for the merit of his overlord Thirumalai Nayak. This endowment was used for the renovation of the temple and performing Pujas. Another record denotas that one sluice was constructed by certain Vana Vichachatara Nadalvan, who belongs to Sruthiman caste. During the tail end of the Chola period, emergence of cetain caste cheifs like Sruthiman and Naththaman were already noticed from some records. Later on these cheifs held sway in the administration of this region.

Later chola inscriptions of Thaluthalai village, trace the influence of Arakalur cheif Vanakovaraiyar who was also named as Magathai Nadalvan. The poligar of Ariyalur, Rangappa Malavaryar played crucial role in the politics of this region. It was recorded in Nannai village inscriptions. The local people had planted number of Iluppai trees, and out of their produet they met out the expenses of the temples.

One Mungilpadi inscription reveals that Vishnu temple was constucted by a cheif Vikkirama chola Malaya kularayan during the later chola reign. The endowment made by Ariyalur Poligar Krishnappa Malavaryar were also mentioned in other two records.

One blacksmith from varagar, Uthayan Periya Nayakan, had donated a bronze image of suladevar (Trident). This donation was made instead of the previous idol which was donated by his grand father was lost during some calamity. The role played by the Reddi Community people in the social history of this region was learnt from th records of Mangun and Venpavur.

The cheifs of Bana clan were staunch followers of Vaishnavism. They were endowed considerably for the Vishnu temples. Ponparappina Isvaram, Thayinum Nallavinnakar were the two temples benefited by them. The Vishnu temple later on changed as Chitrameli Malaimandala Desi Vinnagar. This change was occured during the later part of 13th Century A.D. because of the influence of Chiththirameli Periya nadu, an organisation of agriculturists. All these details are known from the records of Venpavur.

Koyilpalayam, another village, provides some later chola inscriptions. An image of Adipuram Amman was installed by a lady Kunran Devi Kulothunga choliyar. This image might have been specially worshiped duing Adi month (July-August) on the Puram day. Some cheifs of Vanakovaraiya family had took some active part in the developmental activities.

Ten records have been documented from Chittali village. All of them belong to later Chola and Hoysala rulers. Endowments of land and lamps are mentioned in these records. During Hoysala Somisvara period this village was named as Devanna Chaturvedhimangalam..

One record of Uththama chola (10 C.A.D.) noticed at Sirukampur villlage reveals the construction of Uththama cholan mantapa in Jambulinga Swami temple. Considerable number of inscriptions mention the plantation of Iluppai trees for getting oil to light the lamps at various temples in this area.

Thiruvalanthurai inscription narrates an interesting information. During the days of Kulothunga chola III, one cheif Irara Devan Vanatharaiyan was worshiping the temple on Chittirai festival. At that time one snake was entered in to the Royal court. Considering this incident as a bad omen, the king consulted with the Brahmanas for expiation. They advocated them to donate the lands to the temple and brahmins liberally an the king also acted accordingly.

Fom these new inscriptions, Perambalur taluk history of medeaval period can be traced out. At the fag end of the Chola rule Hoysalas, and Vanakovaraiyas were exercised their power. After the Nayak rule, Malavarayas from Ariyalur held sway in this region.

Number of temples had been renovated . These records remain ample. evidence for those who study the social history of such a micro region.



## Karur Taluk Inscriptions

Inscription of Senkalipalaym. belongs to 9th Century A.D. mention the donation of the wife of Tennavan Vanchivel Iravikuvavan. An irrigation tank dug out during 6-7th Century .AD, by Soliya Arayan Akanithan is recorded at Velliyanai Village. Eleven inscriptions are deciphered from Vettamangalam Village. Records of the Kongu Chola kings, Virarajendra, Vikkirama Chola, and later Pandya rulers Virapandya are collected. Endowments of lands and lamps by many social group pepople like Puluva Vettuvar, Karadi Vettuvar, Vellalar, Carpanters, Goldsmiths etc are noticed here.

Melnankavaram inscription dated to 10th Century AD, deals about the Valanciyar, a merchantile group, attracts the attention of the scholars. Bas releif carvings of purse, sickles, lamps, sword, sheild and a figure of Durga are also can be seen in this inscribed stone.

One hero-stone record at Thokaimalai, dated to 8th Century AD has been erected for a hero who was died by the attack of a horse. Kottaipatty inscription also records this place as a merchantile centre. Madurai Nayak rule extended up to this Karur region is attested by a record at Inunkur. Kandarathitha chola record found at Vadaseri village explains the irrigation and agricultural facilities made during this period.

One pious muslim devotee had donated land for a mosque and this message was inscribed in an Tamil inscription at Aththumedu Village in Aravzkurichi taluk. The name of the muslim devotee is writen in Uruthu script also. Munnur record from this taluk provides some information about Valanciyar, a merchantile group.

Kaliyampatti record dated to 10th Century AD. gives the prasasti portion of Ayyapolil Aynurruvar, a cheif merchantile community. Nakaiyanallur inscription mentions two important terms, Komunnurvuvar and Aimperunkulu. But the other details are not known because the damage of the record.



# Thirunelveli District Inscriptions

Thirty four inscriptions copied in some places from Thirunelveli district are inclued in this Volume. Melanatham village alone provides 26 inscriptions, This village is named as Thiruchathanur natham in inscriptions. It liesas a western hamlet of Srivallabha mangalam in Kilkalakkurram. Present Palayankottai town was named as Srivallabha mangalam since early pandya period. This name might have been given in memory of Srimara Sri vallabha.(815-865AD) Records of Jatavarman Kulasekara and Maravarman Sundarapandya are in large number. Most of these records provide informations regarding the perpetual lamp donations. During 13th Century A.D, One mantapa was constructed in the Agnisvara temple at Melanatham, Many renovation works were under taken and separate shrines for Murungan and Nataraja were also constructed. Donations were made as cash, catteles and paddy.

During the days of Maravarman Sundara Pandya I, one dancing girl donated 40 kalam of paddy to enact two dramas during Vaikasi festival.

Virapandyan pattinam a well known village in Tiruchendur taluk was named as Sonadu Kondan Pattinam. The mosque of this village was named after Uthayamarthanda, the Thiruvithangur rulers, and the cheif kadhi of the mosque also named as Uthayamarth thanda kathiyar.

One record from Vallabankottai dated to 9-10th Century AD, belongs to Maran Sadaiyan discribes the donation of 50 sheep by an individual from Nalkur in Venbunadu for the upkeep of Arul thunaipperumpalli (a jain temple). Another record mentions the donation of 45 sheep.

One Sankarankoil inscription mentions the land donation at a village Thani Unnathan entel. This name itself is an interesting informatjon to discuss. The prasasti portion alone is noticed in a record copied at Vasavappapuram.

These records varied from 9th to 16th Century AD, provide interesting, source materials for those who are interested in the socio, economic and political history of this region.



# பெரம்பலூர் மாவட்டம்

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 132/2005**

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1432<br>கி.பி.1510 |
| ஊர் | : பெரம்பலூர்(நகரம்) | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 14/1913 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : - | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : - | | | |

இடம் : அருள்மிகு மதனகோபாலசுவாமி கோயில் கருவறை வடக்குமேற்குகுமுதம்.

குறிப்புரை : இக்கோயிலிலுள்ள நவகிரக வழிபாட்டிற்காக திம்மியப்ப நாயக்கர் ஹுக்கிரட்டியார் இவர்களின் பிரதிநிதியான இறமாஞ்சி துலுக்க நாயக்கர் என்பவர் நிலம் கொடையாக அளித்த செய்தியைக் கூறுகிறது.

**கல்வெட்டு :**

1. *ஸ்வஸ்திஸ்ரீ ஸகாப்தம்* ௲௪௱௩௰௨ இதன்மேற் செல்லா நின்ற பிறபவ ஸம்வத்ஸரத்து ௨௰ நாயற்று *சுக்ரவாரமும்* *பூர்வபக்ஷமும்* பெற்ற ஸூர்யவரான புண்ணிய காலத்திலே இறமாஞ்சி துலுக்கன் நாயக்கர் காரியத்துக்குக் கடவார் திம்மியப்ப நாயக்கர் ஹுக்கிரட்டியார் . . . . முன்பரத *ஸஹஸ்ரநேத்ரநாத* *வ்ருத்தாந்த* பெரும்பலூர் கோபால கூத்தற்க்கு ஆண்டவற்க்கு *நவக்ரஹ*ங்களும் அமுது செய பண்ணவும் இந்த தன்மத்து க இந்த நிலம் பெரிய மண்டலிகளுக்கு சிறுமண்டலிகளுக்கும் பேர்பாதியாகக்
2. *யெமாத ஸஸ்ய*நத்து பலஊண்டாக வேணும் யென்று யரு நிறையேரி கீழ் ஓடைக்கு தெற்க்கு மேலை வாக்காலுக்கு கிழக்கு தற்குத்துக்கு வடக்கு திருவாழி கல்லுக்கு மேற்க்கு நஞ்சை குழி ௨௱ய வடகாலில் தட்டான் குளத்துக்கு கீழ் நஞ்சை குழி ருய ஆக நிலம் ௨௱ருய ஆண்டவர் சன்தி ஆக்கினம் நரமியமுது படியமுது செய பண்ணவுஉ இந்த நிலம் நம்பிமாரே கைக்கொண்டு ஊறு பாவத்திலே போகக் கடவர்கள் ஆக கட்டளை இட்டோம் அந்தப்படிக்கு தானத்தாராண்டு பேரும் அனுபவித்துக் கொள்ளவும்.

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 133/2005

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு : | 18 |
| வட்டம் : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு : | கி.பி.1269 |
| ஊர் : | பெரம்பலூர்(நகரம்) | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : | 12/1913 |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | - |
| எழுத்து : | தமிழ் | | |
| அரசு : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் : | 2 |
| அரசன் : | முதல் சடாவர்மன் சுந்தரபாண்டியன் | | |

இடம் : அருள்மிகு மதனகோபாலசுவாமி கோயில் மகாமண்டபம் வடக்குச் சுவர்.

குறிப்புரை : மன்னனின் அக்காவின் பிறந்த நாளான பரணி நாளன்று அக்கன் திருநாள் திருவிழாவுக்கும் அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்டவற்றுக்கும் 12 வேலி நிலம் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ அருளிச் செயல் வெம்பார் நாட்டு மேல்கூற்று நாட்ட
2. வற்குப் பெரும்பலூரில் கோபால கூத்தரான . . . . .விண்
3. ணகர எம்பெருமானுக்கு அக்கன் திருநாளான பரணியில் தீத்தமா
4. க எழுந்தருளக் கட்டின திருநாளுக்கும் அமுதுபடி சாத்துப்படியுள்ளிட்ட
5. நித்த நிமந்தங்களுக்கும் இவ்வூர் தென்பரப்பில் பதினாறாவது வரையும் அ
6. னைத்தாண்டும் பாழ்கிடந்த நிலத்தில் பதினெட்டாவது முதல் நாட்டார்
7. குடுத்த ஓலைப்படி நிலம் பதிற்று வேலியும் இந்நாயனாற்கு திருநந்தவ
8. னப்புற இறையிலி நிலம் இருவேலியும் ஆக நிலம் பன்னிரு வேலியும்
9. இன்னாயனாற்குக் குடுத்தோம் இன்னாள் முதல் திருவிடையாட்ட இறையி
10. லியாக இன்னிலம் பன்னிரு வேலியும் தூதவரி சீகாரியப் பேறும் கட

11. மையும் பரிசட்ட(க்) காணிக்கை உள்ளிட்ட அனைத்தாய முள்ப்படக் குடு

12. த்தோம் இந்நி . . . .தததான் வேண்டும் பயிற் செய்து இந்நாய

13. னாற்குத் திரு . . . . கும் சந்திக்கும் திருப்பணிக்கும் உடலாக்கி கொள்ள

14. வும் இப்படிக்கு இவ்வோலையே பிடிபாடாகக் கொண்டு நான்கெல்லை

15. யிலும் திருவாழிக் கல்லும் நாட்டுவித்து சந்திராதித்தவற் செல்வதா

16. க கல்வெட்டிக் குடுத்தோம் இவை நட்டுருடையான் எழுத்து

17. இவை சுந்தரபாண்டிய விழுப்பரையன் எழுத்து *வி௨௧௨ ௨*

த.நா.அ. தொல்லியல் துறை

தொடர் எண் : 134/2005

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : 17+1 |
| வட்டம் | : பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : கி.பி.1268 |
| ஊர் | : பெரம்பலூர் நகரம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : 13/1913 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : - |
| எழுத்து | : தமிழ் | | |
| அரசு | : பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : 3 |
| அரசன் | : முதல் சடாவர்மன் சுந்தரபாண்டியன் | | |

இடம் : மதனகோபாலசுவாமி கோயில் அர்த்த மண்டபம் வடக்குச் சுவர்.

குறிப்புரை : பாண்டியப் பேரரசியான தென்னவனை முழுதுமுடையாள் என்பவர் மன்னனின் பிறந்த நாளான பரணி நாளில், வெகுகாலமாக பாழாய்க் கிடந்த நிலத்தை சீர்செய்து 12 வேலி நிலம் திருவிடையாட்டமாகக் கொடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ (எம் மண்டலமும் கொண்டருளிய)
2. சுந்தரபாண்டிய தேவற்கு பதினேழாவதி
3. ன் எதிராமாண்டு ஆவணி மாத (முத)லாக நம்
4. பிராட்டியார் தென்னவனை முழுதுமுடையா
5. (ள்) திருநாள் பரணியிலே தீர்த்தமாக இன்
6. னாயனார் திருநாள் எழுந்தருள அமுதுபடி
7. சாத்துப்படி உள்ளிட்டு வேண்டு மவை
8. யிற்றுக்கு பெரும்பலூர் தென்பரப்பி
9. லே அனைத்தாண்டும் பாழ் கிடந்த

10. நிலத்திலே பதிற்று வேலியும் இந் னா

11. யனாற்கு திருநந்தவனப்புற இறை இலி

12. யாக நிலம் இருவேலியும் ஆக (நிலம் பன்)

13. (னிரு வேலியு)ம் இந்நாள் முதல் திருவிடை

14. யாட்ட இறையிலியாக இவ்வூர் ஊரவர் இ

15. றையிலியாக விட்டுத் திருக் கை மலரிலே

16. உதகம் பண்ணினபடியே திருவாழி ஆழ்

17. வாரையும் எழுந்தருளிவித்து சந்திரா

18. தித்தவற்க் காணியாக கல்வெட்டிக் கெ

19. ாண்டு திருநாள் எழுந்தருளிவிக்கவும் . .

20. பது இவை நாட்டவர் பணியால் ஆளாக

---

* கடைசியில் சிமெண்ட் பூச்சு பூசப்பட்டுள்ளது.

த.நா.அ. தொல்லியல் துறை　　　　தொடர் எண் : 135/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 17+1 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1268 |
| ஊர் | : | பெரம்பலூர் (நகரம்) | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 11/1913 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 4 |
| அரசன் | : | முதல் சடாவர்மன் சுந்தர பாண்டியன் (பெருமாள் சுந்தர பாண்டிய தேவர்) | | | |

இடம் : மதனகோபாலசுவாமி கோயில் அர்த்த மண்டபம் வடக்குச் சுவர்.

குறிப்புரை : கல்வெட்டில் இறுதிப் பகுதி சிதைந்துள்ளது. பெருமாள்சுந்தரபாண்டியனின் மனைவியான தென்னவனை முழுதுமுடையாள் என்பவர் மன்னனின் பிறந்த நாளான பரணி நட்சத்திரத்தில் திருவிழா நடப்பதற்கு, பாழாய்க் கிடந்த நிலத்தை சரிசெய்து பன்னிரு வேலி நிலம் திருவிடையாட்டமாகக் கொடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஶ்ரீ பெருமாள் சுந்தர பாண்டி
2. ய தேவற்கு யாண்டு பதினேழாவதின்
3. எதிராமாண்டு ஆவணி மாத முதலாக நம்
4. பிராட்டியார் தென்னவனை முழுதுமுடைய
5. திருநாள் பரணியிலே தீத்தமாக இன்னாயனார்
6. திருநாள் எழுந்தருள அமுதுபடி சாத்துப்படி உள்
7. ளிட்டு வேண்டும் அவையிற்றுக்கு பெரும்
8. பலூர் தென்பரப்பில் சிறுபாச்சூர் வழிக்கு . . .

9. கும் கிழக்கும் அனைத்தாண்டும் பாழ்கிட

10. ந்த நிலத்தில் பதிற்று வேலியும் இந்நாய

11. னாற்கு திருநந்தவனப்புற இறையிலிக்கு நி(லம்)

12. இருவேலியும் ஆக நிலம் பன்னிரு வேலி

13. யும் திருவிடையாட்ட இறையிலி ஆக திருக்

14. கை மலரிலே உதகம் பண்ணிக் குடுத்தோம்

15. இப்படிக்கு இவ்வோலையே பிடிபாடாகக்

16. கொண்டு சந்திராதித்தவற் காணியாகத் தி

17. ருவாழி ஆழ்வாரை எழுந்தருளிவித்து கல்வெ

18. ட்டிக் குடுத்தோம் பெரும்பலூர் ஊரவரோம்

19. இப்படிக்கு இவை இவ்வூரவர் பணியால் ஊர்க்

20. கணக்கு இளவேளூருடையான் வழித்துணை

21. ப் பெருமாள் எழுத்து . .

த.நா.அ. தொல்லியல் துறை

தொடர் எண் : 136/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | 16ம் நூற்றாண்டு |
| ஊர் | : | பெரம்பலூர் (நகரம்) | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 10/1913 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | நாயக்கர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 5 |
| அரசன் | : | கிஷ்ணப்ப நாயக்கர் | | | |

இடம் : மதனகோபாலசுவாமி கோயில் கருவறை தெற்கு குமுதம்.

குறிப்புரை : கிஷ்ணப்ப நாயக்கர் அய்யந் காரியகர்த்தரான அய்யங்காறய்யரும், வெண்பார் சீர்மை நாட்டாரும் மதனகோபாலசுவாமி கோயிலுக்கு நொச்சியம் கிராமத்தை சர்வமானியமாகக் கொடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு:**

1. t ℘ ஷு மாசி *மீ* உய௯ ஸ்ரீமத்து கிஷ்ணப்ப நாயக்கர் அய்யந் காரியத்துக்கு கற்தரான அய்யங்காறய்யரும் வெண்பாற் சீர்மை நாட்டாரும் பெரும்பலூர் பெருமா
2. ள் கோபால கூத்தற்கு நொச்சியம் கிறாமம் சர்வ மானியமாக சேத்து கல்வெட்டிவித்தபடி பூறுபமாக நொச்சியம் தன்ம புத்திரர் விட்டு நடத்தி வந்த கிறாமத்திலே சூரப்ப நாயக்
3. கர் அய்யந் சில பொன் சேரடியாக பற்றிக் கொண்டு வருகையிலே இப்பொழுது அந்த சேரடி பொன் வேண்டாமென்று நிறுத்தி சர்வ்வ மாந்யமாக பெருமாள்
4. திருவாராதினை திருப்பணிக்கு சேத்தோம் யிந்த தன்மம் சந்திராதித்த வரையும் நடத்தி வரக் கடைவோமாகவும் யிந்த (த)ந்மத்தை யிராசகா மாகுதல் நாட்டார். . . அகுதம்
5. பண்ணிந பேர்கள் தங்கள் மாதா பிதாவை கொந்ற தோசத்திலே போகக் கடைவராகவும் கங்கை கரையிலே காராம் பசுவை கொந்ற தோஷத்திலே போகக் கடை
6. வராகவும்.

த.நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் : 137/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 10 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1258 |
| ஊர் | : | பெரம்பலூர் (நகரம்) | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 9/1913 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 6 |
| அரசன் | : | முதல் சடாவர்மன் சுந்தரபாண்டியன் | | | |

இடம் : அருள்மிகு மதனகோபாலசுவாமி கோயில் கருவறை தெற்குச் சுவர்

குறிப்புரை : பெரம்பலூர் கோபால கூத்த விண்ணகரப் பெருமாளுக்கு திருநந்தவனப்புறமாக இறையிலியாய் முன்பு கொடுத்த கொடையை அரசன் மீண்டும் தன்பிறந்த நாளான சோதித் திருநாளில் விழா கொண்டாடுவதற்காக நிலம் அளித்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ அருளிசெயல் வெம்பார் நாட்டு மே(ற்)
2. கூற்று நாட்டவற்க்கு பெரும்பலூரில் கோபால
3. கூத்தர் விண்ணகர எம்பெருமானுக்கு திருநந்
4. தவனப்புற இறையிலியாய் திருவாராதனமும் திரு
5. ப்பணியும் நடத்தி திருநாளும் எழுந்தருளிவிப்பதாக
6. முற்காலத்தில் கல்வெட்டினபடி இறையிலியாய் பி
7. ன்பு திறப்பாய் பத்தாவது வரையும் வாரம் கொண்டு
8. போந்த நொச்சியம் முன்பிலாண்டில் கல்வெட்
9. டினபடியே இன்னாயனாற்கு திருவாராதனமும் திருப்ப
10. ணியும் நடத்தி சித்திரை மாதம் நாம் பிறந்த நாள் சோதி

11. யிலே தீத்தம் வ௲ஷாதித்தருளுவதாக திருநாள் எழுந்தரு

12. ளுவதாகவும் இவ்வூர் நான்கெல்லைக் குள்பட்ட னஞ்செ

13. ய் புன்செயில் பட்டர்கள் புலவர்கள் இறையிலியும் உள்(ளூ)

14. (ர் ந)ாயமார் திருவிளக்குப்புற இறையிலி . . . . .

15. யும் நீக்கி உள்ளூர் னாயமார் தூதவரி . . . சீகாரிய பேறும்

16. காணிக்கையும் நத்தவரியும் மரவடை குளவடையும்

17. தறியிறை மனையிறை செக்கிறை வெட்டி ஆனைக்கூ

18. டம் குதிரை பந்தி மற்றும் எப்பேற்பட்ட அனைத்தா

19. யங்களும் உள்பட இன்னாயனாற்க்கு இறையிலியாக

20. குடுத்தோம் இப்படிக்கு இவ்வோலை பிடிபாடாகக்

21. கொண்டு கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்து இவ்

22. வூர் நான்கெல்லையிலும் திருவாழிக் கல்லும் நாட்டி

---

* இறுதிப் பகுதி சிமெண்ட் பூசப்பட்டுள்ளது.

த. நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 138/2005

மாவட்டம் : பெரம்பலூர்

வட்டம் : பெரம்பலூர்

ஊர் : பெரம்பலூர் (நகரம்)

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : பாண்டியர்

அரசன் : முதல் சடாவர்மன் சுந்தரபாண்டியன்

ஆட்சி ஆண்டு : 9

வரலாற்று ஆண்டு : கி.பி. 1257

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : 8/1913

முன் பதிப்பு : -

ஊர்க் கல்வெட்டு எண் : 7

இடம் : அருள்மிகு மதனகோபாலசுவாமி கோயில் கருவறை மகாமண்டபம் தெற்குச் சுவர்.

குறிப்புரை : சிலரின் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டு அதனை அரசன் காரியத்துக்கு உரிய அதிகாரிகளின் செலவுகளுக்காக ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

1. திரிபுவனச் சக்கரவத்திகள் கோனேரின்மை கொண்டான் வெம்பார் நாட்டு நாட்டாற்(கு) தங்
2. கள் நாடு ஒன்பதாவது முதல் வாரப் பற்று வாரம் கொள்ளவும் கடமை பற்று கட
3. மை கொள்ளுவதாகச் சொன்னோம் இப்படியால் வந்த முத(ல்) சுந்தரபாண்டிய தே
4. வர் காரியஞ் செய்வார்களுக்கு இசையச் செலவறுக்க இப்படி சொல்லுவதாக. . . . .
5. ரைப போதக் காட்டச் சொன்னோம் இவை சிறுகம்பூருடையான் எழுத்து . . . ப
6. மூந்தீ பராயன் எழுத்து உ யாண்டு ஒன்பதாவது நாள் நூற்றறுபத்தாறு உ

த. நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் : 139/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | 12-ம் நூ.ஆ |
| ஊர் | : | பெரம்பலூர் (நகரம்) | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 8 |
| அரசன் | : | - | | | |

இடம் : அருள்மிகு மதனகோபாலசுவாமி கோயில் மகாமண்டபம் தூண் I

குறிப்புரை : திருமண்டபம் வீரபயங்கரன் என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. இத்திரும
3. ண்டபம்
4. வீரபயங்
5. கரன்

**த. நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் :140/2005**

மாவட்டம் : பெரம்பலூர்

வட்டம் : பெரம்பலூர்

ஊர் : பெரம்பலூர்(நகரம்)

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : பாண்டியர்

**அரசன்** : -

ஆட்சி ஆண்டு : -

வரலாற்று ஆண்டு : 12-ம் நூற்றாண்டு

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : -

முன் பதிப்பு : -

ஊர்க் கல்வெட்டு எண் : 9

இடம் : அருள்மிகு மதனகோபாலசுவாமி கோயில் மகாமண்டபம் தூண் II

குறிப்புரை : அதே பெயர் இத்தூணிலும் வெட்டப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. வீர பய
3. ங்கரன்
4. மண்டபம்

த. நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 141/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | 12-ம் நூ.ஆ |
| ஊர் | : | பெரம்பலூர் (நகரம்) | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 10 |
| அரசன் | : | | | | |

இடம்: : அருள்மிகு மதனகோபாலசுவாமி கோயில் மகாமண்டபம் தூண் III.

குறிப்புரை : வீரபயங்கரன் பெயர் இக்கல்வெட்டிலும் உள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. வீர பயங்
3. கரன்

த.நா.அ. தொல்லியல் துறை    தொடர் எண் : 257/2005

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1350<br>கி.பி. 1428 |
| ஊர் | : அகூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : இரண்டாம் தேவராயர் | | | |

இடம் : அருள்மிகு சொக்கநாதசுவாமி கோயில் முன்மண்டபம் தெற்கு அதிட்டானம் ஜகதி.

குறிப்புரை : திருச்சிராப்பள்ளி உசாவடியில் கரிகால கன்ன வளநாடு ஆன வன்னாட்டு வெண்பாற் நாட்டில் அசுகூரில் வலங்கை இடங்கையினர் ஒன்றுகூடி அரசுக்கு செலுத்த வேண்டிய பயிர்வழிக் கடமைகளுக்கும், பல இனத்தவர்கள் கொடுக்க வேண்டிய வரிகளுக்கும் அளவை நிர்ணயம் செய்தது பற்றிக் கூறுகிறது. வேறு புதுவரிகள் கொடுக்காமல் இருக்கவும், இக்கல்வெட்டுப்படி செய்யாமல் கல்வெட்டை அழிவு செய்தால் அவர்களுக்கு கொடுக்கும் தண்டனை பற்றியும் இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ *ஸகாப்தம்* ௲௩௱௫௰ இதன்மேல் செல்லா நின்ற ஸௌம்ய வருஷம் மார்கழி மாதம் உயஎவ த்ரயோ*தசி*யும் சனிக்கிழமையும் பெற்ற மூலத்து நாள் திருச்சிராப்பள்ளி உசாவடியில் கரிகால கன்ன வளநாடு ஆன வன்னாட்டு வெண்பாற் நாட்டில் அசுகூரில் வலங்கை தொண்ணூற்று எட்டும் இடங்கை தொண்ணூற்று எட்டும்

2. நிறைவற நிறைந்து குறைவறக் கூடி உடையார் சொக்கநாத நயினார் கோயிலில் திருக் கட்டளையில் கல்வெட்டினபடி இந்த நாட்டுக்கு பூறுவம் மற்ற மரியாதி பயிர்வழி கடமை இறுக்கும் இடத்து நன்செய்க்கு பாழ் சாவி கழித்து பயிர் கூடின நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு அன்பது பணமும் புன்செய் வரகு கேழ்வரகுக்கு பாழ் சாவி கழித்து பயிர் கூடின நிலத்திலே

3. பத்தில்லொன்று கழித்து பயிர் கூடின நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு இருபத்து அஞ்சு பணமும் இளவரிசை ஆன பல பயிருக்கும் இளவரிசைத் துண்டம் கால்வாசி கழித்து பயிர் கூடின நிலத்திலே பத்தில் ஒன்று கழித்து பயிர் கூடின நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு இருபத்து அஞ்சு பணமும் வான்பயிர் ஆன செங்கழுநீர் கரும்பு கொழுந்துக்கு நூறு குழிக்கு

4. அஞ்சு பணமும் வாழை மஞ்சள் இஞ்சிக்கு நூறு குழிக்கு இரண்டரைப் பணமும் கமுகு தென்ன மரத்துக்கு தலை கூடின முதலிலே மரம் ஒன்றுக்கு அரைக்கால் பணமும் ஆட்டைக் காணிக்கைக்கு இருநூற்று இருபது பொன்னும் மகமை தலையாரிக்கத்துக்கு எண்பது பொன்னும் பட்டடைக் குடிஆன செட்டிகள் கைக்கோளர் சேனை கடையார் வா

5. ணியர் பேற்கு பேர் ஒன்றுக்கு இரண்டரைப் பணமும் இடையர் வலையர் கண்மாளர் குடிமக்கள் பறையர் பேற்கு பேர் ஒன்றுக்கு இரண்டு பணமும் புன்பயிற் செய்தால் புனத்துக்கு ஒரு பணமும் இம்மரியாதி இம்முதல் குடுக்க கடவோமாகவும் இது ஒழித்து வேறு புறமுதல் புதுவரி என்று குடுக்க கடவோம் அல்லவாகவும்

6. இப்படிக்கு இந்த கல்வெட்டுப்படி செய்யாமல் இருந்தோர்க்கு உடன்பட்டு கல்வெட்டை அழித்து செய்வார்கள் உண்டானால் அவர்களைத் தீர விளங்கி மேற்படக் குத்தி கீழ்ப்பட இழுத்துப் போடக் கடவோம் ஆகவும் இந்த கல்வெட்டை அழித்தவர்கள் கெங்கைக் கரையிலே கபிலையைக் கொன்ற பாபத்திலே போகக் கடவர்கள் ஆகவும் ஸ்ரீஹஸ்து உ.

த.நா.அ. தொல்லியல் துறை    தொடர் எண் : 257/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1070 |
| ஊர் | : | அசூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 2 |
| அரசன் | : | முதல் குலோத்துங்கன் | | | |

இடம் : அருள்மிகு சொக்கநாதசுவாமி கோயில் கருவறை உள்சுவரில் வைத்து கட்டப்பட்டுள்ள தனிக் கல்.

குறிப்புரை : அருமொழி ஈஸ்வரமுடைய மகாதேவர்க்கும், துர்க்கை, பிடாரியார் ஆகிய தெய்வங்களுக்கும் பூஜைக்காக நிலம் வழங்கப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. . . . . சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ . . . . .
2. வளநாடாகிய உத்துங்க வளநாட்டு வடவசு . . . .
3. அருமொழி யீசுவரமுடைய மஹாதேவர்க்கு திருப்ப . . . .
4. ஒரு வேலியும் மந்திர போனகத்துக்கு . . . . .
5. நிலம் ஐய்ஞ்சு மாவும் துற்கையார்க்கு . . . .
6. வும் பிடாரியார்க்கு நிலம் மூன்று மாவும் . . . .
7. வேப்பக் குண்டில் ஒரு மாவும் குமாரமங்கல . . . . .
8. ஒரு வேலியும் சன்திராதித்தவற் திருப்படி மா . . . . .

த.நா.அ. தொல்லியல் துறை    தொடர் எண் : 209/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1592<br>கி.பி. 1670 |
| ஊர் | : | இலுப்பைக்குடி | இந்தியக் கல்வெட்டு<br>ஆண்டு அறிக்கை | : | 441/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | மதுரை நாயக்கர் | ஊர்க் கல்வெட்டு<br>எண் | : | 1 |
| அரசன் | : | சொக்கநாத நாயக்கர் | | | |

இடம் : ஊரின் நடுவில் புதைந்து கிடக்கும் தூண்.

குறிப்புரை : ஊற்றத்தூர் பிரிவுக்கு அதிகாரியாக விளக்கிய பெரிய அழகிரி நாயக்கர் என்பவர் மதுரை மன்னர் சொக்கநாத நாயக்கருக்குப் புண்ணியமாக இலுப்பைக்குடி கிராமத்தை அன்னதானக் கட்டளைக்கு மானியமாக வழங்கியுள்ளார் என்ற செய்தியினை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

**கல்வெட்டு :**

1. சகாற்த்தம் ௲(ஈ)
2. ௲௫௱ மேல் செல்லா
3. நின்ற சாதாரண ஸு
4. கார்த்திகை மீ ௨௰௪௨
5. வியாழக்கிழமையு
6. ம் பூறுவ பக்ஷத்து
7. அஸ்ட்டமியும் பூர ந
8. ஷ்(ஷ)த்திரமும் பெற்ற
9. சுபதினத்தில் விசுவனா
10. த சொக்கனாத னாயக்
11. கரய்ய னவர்கள்

12. புண்ணியமாக ஊ
13. ற்றத்தூர் சாதத்திற்
14. க்கு பிறுதானி பெ(ரிய)
15. அழகிரி னாயக்க(ரய்ய)
16. னவர்கள் கட்டளை(யி)
17. ட்டது இலுப்பைக்குடி
18. (கிறா)மம் நத்தம் சுற்
19. றெல்லை சாத்தனூ
20. ர் எல்லைக்கு கிழக்கு
21. புலிமிசை எல்லைக்
22.. கு மேற்கு கூடலூர் எல்
23. லைக்கு மேற்கு குள
24. த்தூர் எல்லைக்கு வட
25. க்கு இன்னான்கு எல்
26. லைக்கு உள்பட்ட ந
27. ஞ்சை புஞ்சை மாவடை (மர)
28. டை உள்பட கட்ட
29. ளை யிட்ட படியினாலே
30. இந்த தன்மம் சந்திரர்
31. ஆதித்தவரைக்கும் உ
32. த்தரோத்திரமாக நட
33. த்தி விச்ச பேர்கள்
34. கெங்கை சீமையி
35. லே கோடி கன்னி
36. யாதானப் பலனு
37. ம் கோடி கோதான
38. ப் பலனும் பெறு
39. வாராகவும் இந்த
40. (அன்னதான தன்ம

41. த்துக்கு அகுதம் பண்

42. ணின பேர்கள் கெ

43. ங்கை கரையிலே

44. காராம் பசுவை

45. கொன்ற தோஷத்

46. திலே போவாராகவும்).

த.நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் : 278/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1753 கலி 4932 கி.பி. 1831 |
| ஊர் | : | க.எறையூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 442/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | | | | |

இடம் : ஊரின் கிழக்கே 2 கி.மீ. தொலைவில் தெவ்வாய் குளம் என்றழைக்கப்படும் தேவுதாய் குளக்கரையில் நடப்பட்டுள்ள பலகைக் கல்.

குறிப்புரை : பேரழி நல்ல பெருமுடையார் என்பவர் இக்குளத்தைச் சுற்றிலும் இலுப்பைமரம், புளிய மரம், மாமரம் போன்ற மரங்கள் நட்டு அதிலிருந்து கிடைக்கும் வருவாயைக் கொண்டு அழகீசுபரசுவாமி கோயில், வரதராஜ பெருமாள் கோயில் ஆகிய கோயில்களில் விளக்கெரித்த செய்தி கூறப்பட்டுள்ளது.

கல்வெட்டு:

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. சாலிவாகன ச
3. காற்தம் ௲எள௱௫(௰௩) க
4. லியுகம் சகூ௲௱௩௰௨ யி
5. துக்கு மேல் செல்லா நின்ற கர
6. ஷ தை மீ ௨௰௬ உ பேறெழியிலி
7. ருக்கும் நல்ல பெருமுடையார்
8. யிலுப்பை புளியும் மாமரம் பல
9. விருஷத் தோப்பு மலையடி தெ
10. ற்ப குளத்தகத்திலும் வைச்சு பரி

11. பாலனம் பண்ணி அந்த தோப்பு
12. ஷெ யூர் அழகீசுவரசுவாமி வறதறா
13. சப் பெருமாள் கோவிலுக்கு பாதி
14. யும் மலையடி தெற்(ப)குளத்துக்கு பாதி
15. யுமாய் சிலாசாதனம் பண்
16. ணி யிருக்குற படியினாலே அத் த
17. ற்மத்துக்கு யாதாமொருவன் வி
18. க்கினம் பண்ணினால் கெங்க
19. கரையிலே காராம் பசுவைக் கொன்
20. ன தோஷத்திலே போவான் உ

த.நா.அ. தொல்லியல் துறை　　　　　　தொடர் எண் : 279/2005

மாவட்டம் : பெரம்பலூர்

வட்டம் : பெரம்பலூர்

ஊர் : கல்பாடி

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு :

அரசன் :

ஆட்சி ஆண்டு : -

வரலாற்று ஆண்டு : 18-ம் நூற்றாண்டு

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : -

முன் பதிப்பு : -

ஊர்க் கல்வெட்டு எண் : 1

இடம் : வரதராஜ பெருமாள் கோயில் முகமண்டபம் எதிரில் கிடக்கும் பலகைக்கல்.

குறிப்புரை : கல்பாடி திருவிருந்த பெருமாள் கோயிலுக்கு நஞ்சை, 1200 குழியும் புஞ்சை நிலங்கள் 150 குழியும் தானமாக வழங்கிய செய்தி கூறப்பட்டுள்ளது.

கல்வெட்டு:

முன்பக்கம்

1. ஸ்ரீஉது கற்பாடி
2. திருவிருந்த பெரு
3. ம(ா)ளுக்கு உள்ளூர் பு
4. ஞ்சை குழி கூ உா
5. * இரைரூர் நஞ்செ
6. ச குழி ௱௫௰ இது
7. துலுக்கண் நாய
8. க்க தந்மம் இ

பின்பக்கம்

9. து(க்கு) அகிதம்
10. பண்ணினவன்
11. கெங்கை கரை
12. யில் காராம் பசுவை
13. வ கொன்ற பா
14. வம் ஆகக் கட
15. வர்கள்.

---

* எறையூர் என்று வழங்கப்படுகிறது.

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 280/2005**

மாவட்டம் : பெரம்பலூர்

ஆட்சி ஆண்டு : -

வட்டம் : பெரம்பலூர்

வரலாற்று ஆண்டு : 18ம் நூற்றாண்டு

ஊர் : கீழப்புலியூர்

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : -

மொழி : தமிழ்

முன் பதிப்பு : -

எழுத்து : தமிழ்

அரசு : -

ஊர்க் கல்வெட்டு எண் : 1

அரசன் : -

இடம் : மன்னாத பச்சையம்மன் கோயில் எதிரிலுள்ள குளக்கரையில் நடப்பட்டுள்ள கல்.

குறிப்புரை : மேற்பகுதியில் சூரியன் சந்திரன் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. பச்சையம்மன் கோயில் திருவிளக்குப் பூசைக்காக கோயிலைச் சுற்றியும் ஏரிக்கரையைச் சுற்றியும் இலுப்பை, புளிய மரங்கள் வைக்கப்பட்ட செய்தியை இக்கல்வெட்டு கூறுகிறது.

**கல்வெட்டு :**

ஸ்ரீராமஜயம்

1. Rgfþ J வைய்யாசி மீ உய
2. கூஉ குருவாரம்(ம்) மிருகசீரிஷ ந
3. க்ஷத்திரம் கூடின சுபதினத்தில்
4. புளியூரிலிருக்கும் மன்னாத பச்
5. சையம்மன் திருவிளக்கு பூசை
6. ச கட்டளைக்காக புதூரு அய்ய

7. ம் பெறுமாளுடையான்

8. குமாரன் அய்யம்பெரு

9. மாளுடையான் குமரப்

10. படையானாலேயும் ஷ பே

11. காவிலை சுத்திலும் பே

12. யறிகரையிலு மிறுக்

13. க பட்ட யிலுப்பை புளி

14. ய மரம் யிந்த தற்மஞ் செ

15. ய்யலாச்சுது யிதை பறிபா

16. லனம் செய்தால் அசுவமே

17. த யாகம் பண்ணின பலனுண்

18. L tpfhj k;nraj hy ; ஷ யா

19. கத்தை யழித்த பலநுண்டு.

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 294/2005

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : 3 |
| வட்டம் | : பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : கி.பி.1015 |
| ஊர் | : கொத்தவாசல் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : 518/1994 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : - |
| எழுத்து | : தமிழ் | | |
| அரசு | : சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : 1 |
| அரசன் | : முதலாம் இராசேந்திரன் | | |

இடம் : சொக்கநாதர் (எ) வைத்தியநாதசுவாமி கோயில் வளாகத்தில் கிடக்கும் பலகைக் கல்.

குறிப்புரை : எழுத்துகள் (முற்பகுதி) தேய்ந்துள்ளன. முதலாம் இராஜேந்திர சோழனுடைய மெய்க்கீர்த்தியுடன் இக்கல்வெட்டு தொடங்குகிறது. கொற்றவாயில் இறைவனுக்கு இவ்வூர்ச் சபை இரண்டு மாநிலம் வழங்கிய செய்தி கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. வடகரை ராஜேந்திரசிங்க வளநாட்டுத் தனியூர் ஸ்ரீபிராந்தகச் சதுர்வேதிமங்கலம் என்ற பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமந்நி வளர இருநில மடந்தையும் போர்ச்செயப் பாவையும் சீர்தனி
2. செல்வியும் தன்பெருந் தேவியராகி இன்புற நெடுதிய ரூழியுள் இடதுறை நாடும்
3. துடர்வன வேலிப் படர்வன வாசியும் சுள்ளிச் சூழ்மதிள் கொள்ளிப்
4. பாக்கையும் நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும் பொரு
5. கடலீழத் தரையர்தம் முடியும் ஆங்கவர் தேவியர் ஓங்கெழில்
6. முடியும் முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த சுந்தர முடியும்
7. இந்திரன் ஆரமும் தெண்டிறை ஈழமண்டலம் முழுவதும் எறிபடைக் கேரளற்
8. முறைமையிற் சூடும் குலதனமாகிய பலர்புகழ் முடியும் செங்கதிர் மாலையுங்

9. சங்கதிர் வேலைத் தொல்பெருங்காவல் பல்பழந் தீவும் செருவில் சினவி

10. இருபத்தொரு கால் அரசுகளை கட்ட பரசுராமன் மேவரும் சாந்திமத்

11. தீவரண் கருதி இருத்திய செம்பொன் திருத்தகு முடியும் பயங்கொரு பழிமிக முயங்கியில்

12. முதுகிட்டொளித்த சயசிங்கன் அளப்பரும் புகழொடும்

13 . . . . . . . .

14. . . . . . .

15. மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பரகேசரி பன்மரான

16. உடையார் ஸ்ரீ *ஸ்ரீ ராஜெஜூ* சோழ தேவற்கு யாண்டு மூ

17. ன்றாவது வடகரை *ராஜெஜூ ஸிங்க*

18. வளநாட்டுத் தனியூர் ஸ்ரீபிராந்தகச் சதுர்வேதி

19. மங்கலத்து . . . . . .

20. . . . . . . . னனேன்

21. . . . . . . . வசத்து ப ரு

22. கு சந்த்ராதித்தவல் நிற்க வைத்தேந்

23. (ன்றேன்) இது பந்*ஊஹெமஙவர ரகைக்ஷ* கொ

24. ற்றவாயில் மஹாதேவற்கு இவூர் ஊரொம் வை

25. த்த நீர்நிலம் . . . . . . .இருமா இது பந்மா

26. *ஹெமஙவர ரகைக்ஷ*

த.நா.அ. தொல்லியல் துறை　　　　தொடர் எண் : 295/2005

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : - |
| வட்டம் | : பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : 16ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : கொத்தவாசல் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : - |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : - |
| எழுத்து | : தமிழ் | | |
| அரசு | : மழவராயர் | ஊர்க் கல்வெட்டு எண் | : 2 |
| அரசன் | : - | | |

இடம் : சொக்கநாதர் (அ) வைத்தியநாத சுவாமி கோயில் வளாகத்தில் கிடக்கும் பலகைக் கல்.

குறிப்புரை : கல்வெட்டில் முற்பகுதி உடைந்து காணாமல் போய்விட்டது. பிற்பகுதி மட்டும் உள்ளது. இக்கோயில் இறைவனின் பூசை, நெய்வேத்தியம், அபிஷேகம், திருவிளக்கு போன்றவற்றிற்கு அளிக்கப்பட்ட நிலம் பற்றிக் கூறுகிறது.

**கல்வெட்டு :**

முன்பக்கம்

. . . . . . . .

1. அபிஷேகம் நெய்
2. வேற்றியம் திருவி
3. ளக்கு சுக்கிர வாரம்
4. யிதுக்கு சேத்த பூதா
5. னஉ மங்கான . . .
6. த்தானுக்கு கிழக்கு அ
7. ய்யனார் (கோயிலு)க்கு
8. மேற்கு முனியப்பா
9. கோயிலுக்கு தெ
10. க்கு பெருமாள்

பின்பக்கம்

1. வேராகவும் இது
2. க்கு அழிவு சொன்
3. னவன் கெங்கை
4. கரையிலே காரா
5. ம் பசுவை கொன்
6. ற தோஷத்திலே
7. போக கடவேரா
8. கவும்.

த.நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் : 195/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1555 கி.பி.1633 |
| ஊர் | : | கொளக்காநத்தம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 444/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | நாயக்கர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | திருமலைநாயக்கர் | | | |

இடம் : வேணுகோபால சுவாமி கோயில் நுழைவாயில் எதிரிலுள்ள பலகைக் கல்.

குறிப்புரை : மதுரை திருமலைநாயக்கருக்குப் புண்ணியமாக அவரது அதிகாரியான இராமப்பய்யன் இவ்வூர் மதனகோபாலசுவாமி கோயில் திருப்பணிக்கும், திருவாராதனத்துக்கும் 1000 குழி நிலம் தானமாகக் கொடுத்த செய்தியைக் கூறுகிறது. தற்போது கொளக்காநத்தம் என்று வழங்கப்படும் இவ்வூர் குளக்கானத்தூர் என்று அழைக்கப்பட்டுள்ளது கல்வெட்டால் அறியப்படுகிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் ௲ரு
2. ருயஎ௫ ன் மேல் செல்லா நி
3. ன்ற ஸ்ரீமுக வருஷம் மாசி
4. மாதம் உ௰(ரு) வ ஸ்ரீமது விஸ்வ
5. நாய நாயக்கற் திருமலை நா
6. யக்கரய்யன் காரியத்துக்கு கற்த
7. றான றாமப்பய்யந் மால்வாய் நாடு கு
8. ளக்கானத்தூர் மதன கோபால
9. ஸ்வாமி கோவில் சேநாபதி ஆழ்
10. வார் ஸ்ரீ பண்டாரத்துக்கு குடுத்த
11. தற்ம சாஸநப் பட்டையம் ம
12. தன கோபால சுவாமிக்கு திருப்ப

13. ணி திருவாராதனத்துக்கு திரும
14. லை நாயக்கரய்ய னவர்களு
15. க்கு புண்ணியமாக ஸ்ரீபண்டா
16. ரத்துக்கு திருவிளையாட்டமாகக்
17. கட்டளை யிட்டது மால்வாய் நாடு
18. குளக்காநத்தூர் மாகாணியில்
19. சேந்த கிறாமம் கொட்டறையில் சே
20. சந்த கீழ்தானத்தூர் மால்வாய் னா
21. ட்டு அளவால் கட்டளையிட்ட குழி
22. சூ யிந்த நிலம் ஆயிரம் குழிக்கு
23. ம் சாத்தனூர் எல்லைக்கு மேற்
24. கு உம்பிளக்கானத்தூர் எல்லை
25. க்கு வடக்கு மாதவ எல்லைக்குக் கி
26. ழக்கு குறும்பன் பாளையத்துக்கு
27. தெற்கு கண்ட நிலமும் கொட்டறை
28. க் காட்டில் சோழகன் குளத்துக்கு மே
29. மர்க்கு கண்ட நிலமும் யிந்த னான்கெ
30. கல்லையி லுண்டாந நிலம் அனுப
31. வித்துக் கொள்ளவும் திருமலை
32. நாயக்கரய்யன் புண்ணியமா
33. க சந்திராதித்தவரையும் அனுபவி
34. த்துக் கொள்ளவும் யிந்த புண்ணி
35. யத்துக்கு ஆறாகிலும் அகிதம் பண்
36. ணின பேர் கெங்கைக் கரையிலே
37. ல காராம் பசுவை கொன்ற தோ
38. ஷத்திலே போக கடவராகவு
39. ம் உ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **த.நா.அ. தொல்லியல் துறை** | | | **தொடர் எண்** | **:** | **196/2006** |
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 10 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1226 |
| ஊர் | : | கொளக்காநத்தம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 443/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 2 |
| அரசன் | : | மூன்றாம் இராசராசன் | | | |

இடம் : சிவன் கோயில் அருகே திரு. குமரவேல் ஆசிரியர் வீட்டுவாசலில் கிடக்கும் தூண்.

குறிப்புரை : கல்லின் மேற்பகுதியில் சூரியன் சந்திரன், சக்கரம், திருநாமம், சங்கு பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வூர் ஏரியிலிருந்து கொண்டுவரப்பட்ட இக்கல்வெட்டு மூன்றாம் இராசராசனின் 10-ஆம் ஆட்சியாண்டில் சுருதிமான் சனனாதர் அரையன் தேவனான வாண விச்சாதிர நாடாழ்வான் தூம்பு அமைத்துக் கொடுத்த செய்தியைத் தெரிவிக்கிறது.

**கல்வெட்டு :**

1. *ஸ்வஸ்திஸ்ரீ*
2. *இராஜராஜ* தேவற்கு
3. யாண்டு ய வது இத்
4. தூம்பு செய்வித்தான்
5. ஊற்றத்தூருடைய
6. சுருதிமான் சனனாதர்
7. அரைய தேவநான
8. வாண வி
9. ச்சாதிர நா
10. டாழ்வாந்.

த.நா.அ. தொல்லியல் துறை　　　தொடர் எண் : 222/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1769 கலி 4948 கி.பி. 1847 |
| ஊர் | : | சாத்தநத்தம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | - | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | - | | | |

இடம் : ஒப்பணப் பிள்ளையார் கோயில் எதிரே உள்ள தொடக்கப்பள்ளி வாசலில் நடப்பட்டுள்ள பலகைக் கல்

குறிப்புரை : கல்லின் இருபுறமும் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. தொடக்கத்தில் சக்கரம், திருநாமம், சங்கு, லிங்கம், விநாயகர் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வூர் ஒப்பணப்பிள்ளையார், திருமேனி அழகர், வரதராசப் பெருமாள் ஆகிய் மூன்று கோயில்களின் பயன்பாட்டிற்காக இலுப்பை மற்றும் பிற மரங்கள் வழங்கப்பட்ட செய்தியைக் கூறுகின்றது.

**கல்வெட்டு :**

1. உ ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாக
2. ன சகாப்த்தம் சூளாகூயகூ க
3. லி யாப்த்தா சதூகூாசயஅ யிதின்
4. மேல் செல்லா நின்ற பிலபங்க ஷூ ஸ்ரீ
5. த்திரைமீ யக உ குருவாரம் பூச நக்ஷத்தி
6. றம் கூடின அமுற்த யோகத்தில் ப
7. றவாய் மாகாணம் நன்னை கிறாமத்
8. தில் ஒப்பணப் பிள்ளையார் திருமே
9. னி அழகர் வறதராச பெருமாள் யிந்

10. த மூணு கோவிலுக்கும் ஷெ ஒப்பண
11. பிள்ளையார் கோவிலுக்கு கிழக்கு
12. கல்லை யெல்லைக்கு மேற்கு ஷெ யேறிக
13. ரைக்கி வடக்கு யிந்த னான்ங்கு சதி
14. றத்துக் குள்பட்ட யிலுப்பை தோப்
15. பு பல விறுஷஙகளும் தற்ம ச
16. ாதநமாய் யிட்டது யில்லாம் ஒ
17. [ப்பண பிள்ளையாறுக்கு பூ
18. சைக்காக மாநியம் உஅ நிலம்
19. (யிந்த தற்ம)]

பின்பக்கம்

20. ம் கல்லும் காவேரி
21. புல்லும் பூமியும் உள்ள
22. வரையில் சிலாசாதநம்
24. செய்து யிறுக்குது யிந்த
25. தற்மத்துக்கு யாதாமொறுவ
26. ர் விகாதம் செய்தால் கெங்கை(க)யி
27. லே காறாம் பசுவை வதை செய்த 0
28. தாழத்திலே போவார்கள் உ யிந்த கீ
29. றல் பட்டாமணிய(ம்)

த.நா.அ. தொல்லியல் துறை — தொடர் எண் : 176/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | 10-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | சாத்தனூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 470/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | - | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | - | | | |

இடம் : அருகிலுள்ள ஏரியிலிருந்து கொண்டு வரப்பட்டு சிவன் கோயிலில் வைக்கப்பட்டுள்ள தூம்பு கல்வெட்டு.

குறிப்புரை : சாத்தனூர் உடையான் அரங்கன் அரையன் என்பவன் இவ்வூர் ஏரியிலுள்ள தூம்பினைச் செய்வித்தான் என்று கூறுகிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. வித் தூம்பு அரங்
3. கன் அரையன்
4. செவித்தான்
5. சாத்தன்நூர்
6. உடையான்

த.நா.அ. தொல்லியல் துறை　　　　தொடர் எண் : 150/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 23 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1239 |
| ஊர் | : | தழுதாழை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | மூன்றாம் இராஜராஜன் | | | |

இடம் : கைலாசநாதர் கோயில் அர்த்தமண்டபத் தெற்குச் சுவர்.

குறிப்புரை : மூன்றாம் இராஜராஜனின் 23-ஆம் ஆட்சியாண்டில் மிலாடாகிய ஜநநாத வளநாட்டு வெம்பார் கூற்றத்துத் தழுதாழை உடையார் வடகயிலாயமுடைய நாயனார்க்கு செம்பையாழ்வார் இராஜராஜ தேவரான வாணகோவரையன் என்பான் இறையிலியாக நிலமளித்த செய்தி கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள்
2. ஸ்ரீராஜராஜஜெவற்கு யாண்டு உ௰௩
3. வது மிலாடாகிய ஜநநாத வளனாட்டு வெம்பா
4. (ர்)க் கூற்றத்து தழுதாழை உடையார் வடகை
5. யிலாயமுடை(ய) நாயனார்(க்)கு செம்பையாழ்வார் இ
6. ராராதேவராந வாணகோவரையநேந் இநக்கு(டி
7. மும் (எனவஙவநு) சமு . . ரக்ஷப்ரத்யமாகவும் இந்னாட்டு ே
8. தவையூர் தேவதாந திருவிடையாட்டம் முன்பு உள்ள

9. இறையிலிக்கு சாதநப்படி விட்டு இவ்வூர் நான்கெல்

10. லைகுள்ப்பட்ட நன்செய் புன்செய் ஏந்தல்களு(ம்) மற்று

11. ம் எற்போர்ப்பட்ட பலவகை ஆயங்களும் யஉஉயா

12. ன(ம்) இது மாறுவான் ஏழாறூழியும் (ஆறெச்). . . சமும் அறுவான்

14. இது மாகேபஹ்ர ரகைக்ஷ

மாவட்டம் : பெரம்பலூர்
ஆட்சி ஆண்டு : 11

வட்டம் : பெரம்பலூர்
வரலாற்று ஆண்டு : கி.பி.1189

ஊர் : தழுதாழை
இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை :

மொழி : தமிழ்
முன் பதிப்பு : -

எழுத்து : தமிழ்

அரசு : சோழர்
ஊர்க் கல்வெட்டு எண் : 2

அரசன் : மூன்றாம் குலோத்துங்கன்

இடம் : கைலாசநாதர் கோயில் வளாகத்தில் பீடத்தில் நடப்பட்டுள்ள பலகைக் கல்.

குறிப்புரை : செம்பை நாயகன் கன்மியான ஆறகளூர் வேளான் ஆதித்த நீலன் என்பான் மகதை நாடாழ்வான் செம்பை நாயகனுக்கு நன்றாகத் தழுதாழை இறைவனுக்கு தேவதானமாக நிலம் வழங்கிய செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

முன்பக்கம்

1. ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்க சோழ தே
2. வற்கு யாண்டு ௰௧ வது மிலாடாகிய ஜநநா
3. த வளநாட்டு வெம்பாற் கூற்றத்து தழுதாழை
4. மஹாதேவற்கு செம்பை நாயகந் கந்மியாந
5. ஆறகளூர் வேளாநேந் மகதை நாடாழ்வாநா(ன)
6. செம்பை நாயகநுக்கு நன்றாக அமுது செய .
7. தழுதாழை நந்செ நிலத்திலே பெரிய செ(ய் உ)

8. ட் பட கால் செய்யும் திருமுந்பே திருநந்தவாநம்

9. மாவும் திருமஞ்சணக் கிணறும் புந்செ இருவேலி(யு)

10. ம் தேவதாநமாக சந்திரதித்தவற் செல்ல விட்டே(ந்)

**பின்பக்கம்**

11. ஆ)றகளூர் வேளாந் ஆதித்த

10. நீலநேந் இந்நிலங்கள் மா

11. றுவாந் (சூணை) ஏழெச்

12. ச மறுவாந் வ

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 152/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 6 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1172 |
| ஊர் | : | தழுதாழை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 3 |
| அரசன் | : | இரண்டாம் இராஜாதிராஜன் | | | |

இடம் : அருள்மிகு கைலாசநாதர் கோயில் வளாகத்தில் பீடத்தில் நடப்பட்டுள்ள பலகைக் கல்.

குறிப்புரை : இக்கல்வெட்டில் செம்பை நாயகனான மகதை நாடாழ்வார் நல்ல உடல்நலம் பெற்றிட (அமோக திடகாத்திரர்) ஆறகளூர் வேளான் கலன்நாயகப் பெருமாள் என்பான் சந்திரசேகரர், நாச்சியார், கூத்தாடுந் தேவர் ஆகியோரை எழுந்தருளுவித்து, அத்திருமேனிகளின் திருவமுதுபடிக்கு நிலமளித்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

முதல் பக்கம்

1. ஸ்வஸ்திஸ்ரீ இராஜாதிரா
2. ஜ ஷேவற்கு யாண்டு ஆறா
3. வது மிலாடாகிய ஜநநா
4. த வளநாட்டு வெம்பாற்
5. கூற்றத்து தழுதாழை உ
6. ஹாஷேவர் வடகயிலா
7. ய முடையாற்கு செம்பை
8. ப நாயகநாந மகதை நா
9. டாழ்வார் கல்லியாண தி
10. ருமேநி ஆகவென்
11. று ஆறகளூர் வேளா
12. ன் நீலன்நாயக பெ
13. பருமாளேந் எ
14. ழுந்தருளுவித்த

இரண்டாம் பக்கம்

15. சந்திரசேக(ர)
16. வரும் நாச்சிய
17. ாரும் கூத்தாடு
18. ந் தேவரும் நாச்
19. சியாற்கும் திரு
20. வமுதுபடிக்கு
21. இவ்வூர் நந்செ
22. நிலத்து எ(ன் கா)
23. ணிக்குக் கிழக்கு
24. ஆறகளூர் வே
25. ளாந் ஆதித்த நீ
26. லந் விட்ட நில
27. ங் காலுக்கு ே
28. மற்கும் வடக்

மூன்றாம் பக்கம்

29. . . வூர் நிலத்துக்கு
30. த் தெற்கும் மற்று
31. ம் இந்நிலத்துக்கும்
32. நடுவுபட்ட நிலம் அ
33. ரையே ஒரு மாவும்
34. கணவதியாற்கு நத்த
35. க்காலில் விட்ட நில
36. ம் ஒரு மாவும் (யூ)றணி
37. . யிலாசி ஊரணி
38. க்கு மேற்கு நிலம்
39. (இ)ரு வேலியும் வெ
40. ள்ளாற்றுக்குத் தெ
41. ற்கும் புந்செய் நி
42. லத்தில் கறியமு
43. துக்கும் சந்தி

நான்காம் பக்கம்

44. விளக்குக்கு
45. ம் விட்ட நிலம்
46. முக்காலும் சந்திராதி
47. த்தவற் செல்
48. லபநா ஹெஷூ
49. ர ரெகைக்ஷ அ
50. ற மறவற்க அற
51. மே துணை அ
52. றமல்லது துணை
53. இல்லை

த.நா.அ. தொல்லியல் துறை    தொடர் எண் : 153/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.18-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | தழுதாழை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | - | ஊர்க் கல்வெட்டு எண் | : | 4 |
| அரசன் | : | - | | | |

இடம் : கைலாசநாதர் கோயில் வளாகம் மடப்பள்ளி அருகில் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள உருவத்தின் கீழ் உள்ள எழுத்து.

குறிப்புரை : கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் இக்கோயிலை திருப்பணி செய்தவரின் பெயர் கூறப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

1. சிவ(ஸ்ரீ) சிண்ணவெய நாய
2. க்கர் தேவர்

த.நா.அ. தொல்லியல் துறை    தொடர் எண் : 280/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம்.1589, கி.பி.1667 |
| ஊர் | : | தொண்டைமான்துறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 324/1928 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | தொண்டைமான் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | - | | | |

இடம் : வரதராஜ பெருமாள் கோயில் கருவறை வடக்குச் சுவர்

குறிப்புரை : தொண்டைமான் வழங்கிய தானம் பற்றிக் கல்வெட்டு குறிக்கிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ *ஶகா*
2. ௳௯௨ க்கு௱
3. *அயகூ* இத
4. ன் மேல் செ
5. ல்லா நின்
6. ற பிலவங்
7. க ௵ பங்
8. குனி *மீ* ரு ௳
9. ஆதிவார னாள்
10. பூரட்டாதி நக்ஷ
11. த்திர னாள் தொ
12. ண்டைமாந் தன்ம
13. ம் யிதுக்கு ந(வ)ாபு
14. சாயபு அவர்கள்
15. செருகான் சாய
16. பு அவர்களும் கட்
17. டளை காணி பு
18. . . . . . . .

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 289/2005**

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : கி.பி. 1884 |
| ஊர் | : | தொண்டைமான்துறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : |
| எழுத்து | : | தமிழ் | | |
| அரசு | : | - | ஊர்க் கல்வெட்டு எண் | : 2 |
| அரசன் | : | - | | |

இடம் : வரதராஜபெருமாள் கோயில் கருவறை மேற்குச் சுவர்

குறிப்புரை : தொண்டைமான்துறையில் உள்ள ஸ்ரீவரதராஜப்பெருமாள் கோயில் முன்பு பழுதுபட்டதால் அதனை இக்கிராமத்தினர் மறுபடியும் கட்டினர் என்று இக்கல்வெட்டு கூறுகிறது.

**கல்வெட்டு :**

1. ௲அ௮௰௪ ௵ ஜ
2. ன் ௴ உ௰௫ தேதிக்கி
3. சரியான தாறுண ௵ ஆ
4. நி ௴ ௰௩ தேதி புதன்வாற
5. னாள் பூச நக்ஷத்திரத்தில்
6. தொண்டைமாந்துறை கிறாமத்தி
7. லிருக்கும் ஸ்ரீவறதறாஜ பெருமாள் கோயி
8. ல் (சீ)றணமா போநதைக் கிறாமத்
9. தாறுகளால்(கூடி) கட்டப்பட்டது.

த.நா.அ. தொல்லியல் துறை    தொடர் எண் : 274/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 19 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1235 |
| ஊர் | : | நன்னை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 461/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | மூன்றாம் இராசராசன் | | | |

இடம் : திருமேனிநாதர் கோயில் கருவறை மேற்கு குமுதம் மற்றும் ஜகதி.

குறிப்புரை : இக்கோயில் காணி உடைய பிராமணர்கள் 138 காசுகள் பெற்றுக் கொண்டு விளக்கெரித்த செய்தியைக் கூறுகிறது.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ *ராஜராஜ* தேவர்க்கு யாண்டு ௰௯ஆ(வது) ந(ன்னைநந்தீ)*ஸ்வர* முடைய நாயநார்க்கு திருவிளக்கு *ஸந்தாதி*த்தவல் பலிசையால் செலுத்தக் கடவர்களாக இக்கோயில் காணி உடைய *ஸிவப்ராஹ்மணர்* பாரதாயந் உடையாந் சிவவா*ஸு*தேவநாந *ஸி*வலோக

2. உடையாநும் கணவதி தா*ஸ*நாந தேவநும் உபையம் கொண்ட . . . . காணி உடைய நாதந் வீமநாதந் சேதராய பெருதட்டாந் திருநுந்தா விளக்கு ஒந்றுக்கு காசு அறுபதும் சந்தி விளக்கு ஒந்றுக்கு காசு எட்டாக நந்னை உடையார்களில் பட்டந் பெரியாநும் பிச்சந்

3. திருவரங்கநும் தேவந் சீராநும் பிச்சந் குணாலையும் சொற்(ந) . லி சொற்ந சீரநும் பரவாயுடையாநு(ம்) போற்றி மண்டையும் கிழுமுத்தூர் பள்ளி ஒத்தந் பர்மநாத பிள்ளை நாடாழ்வாநும் வாணிச்சி உ(ய்)யக் கொண்டாளும் ஆக காசு எழுபத்திரண்டும் ஆக காசு நூற்று முப்பத்

4. திரண்டும் கைக்கொண்டு திருநுந்தாவிளக்கு ஒந்றும் சந்திவிளக்கு ப(லிசை)யால் செலுத்தக் கடவோமாக ஒருபோது முட்டுப்பபடில் ஶிவ துரோகிகள் பட் டுது படுவோமாக ஶஃஸதித்து உபையம் கைக்கொண்டோம் உடையாந் சிவல்லோக முடையாநும் கணவதி பட்டந் தேவநும் இவ்வனைவோம்

5. இவூர் காணி உடைய பாடி காப்பாந் குந்றந் திருவநா

6. ரையந் பக்கல் மேற்படியார் நாளதில் உபயங் கொண்ட காசி

7. ல் செலுத்தக் கடவ சந்தி விளக்கு ஒந்றும் ஆக விளக்கு பத்து.

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 275/2005

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 10 |
| வட்டம் | : பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1188 |
| ஊர் | : நன்னை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 460/1992-93 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 2 |
| அரசன் | : மூன்றாம் குலோத்துங்கன் | | | |

இடம் : அருள்மிகு திருமேனிநாதர் கோயில் கருவறை தெற்குக் குமுதம்

குறிப்புரை : நன்னை திருவகீஸ்வரம் உடைய நாயனார்க்கு திருப்படி மாற்றுக்காக நன்செய் நிலம் மூன்று வேலியும், புன்செய் நிலம் பத்து வேலியும் சிவபிராமணர்களிடம் முப்பது பசுக்களும் தானமாகக் கொடுக்கப்பட்ட செய்தியைக் கூறுகிறது.

கல்வெட்டு:

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவந சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு பத்தாவது உகளூற் கூற்றத்து நந்னை திருவகீஸ்வரம் உடைய நாயநாற்கு
2. திருப்படி மாற்று(க்)கு இவ்வூர் ஏரி நடுவில் தூம்பு றப்பாரு கழநி முதலாக வடக்கு நந்செய் நில(ம்) மூன்று வேலியும் புந்செய் நிலம் பதிற்று வேலியும் இ நா
3. யநாற்கு *ஶஞ்ஶாதி*த்தவரை செல்வதாக இது பந்மாயே*ஶவர ஶ*க்ஷை உ சிவப்பிராமணர் பக்கல் தேவணி பசு ௩௰.

த.நா.அ. தொல்லியல் துறை    தொடர் எண் : 276/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1671, கி.பி. 1749 |
| ஊர் | : | நன்னை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 463/1992-1993 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | அரியலூர் பாளையக்காரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 3 |
| அரசன் | : | ரெங்கப்ப மழவராயர் | | | |

இடம் : திருமேனிநாதர் கோயில் வளாகத்தில் கிடக்கும் பலகைக் கல்

குறிப்புரை : ரெங்கப்ப மழவராயரும். முத்து சேர்வைக்காரரும் நன்னை கீழ்க்காட்டில் இக்கோயிலுக்கு நிலம் தானம் செய்துள்ளனர் என்பதை இக்கல்வெட்டால் அறிகிறோம்.

**கல்வெட்டு**

1. உ சாலிவாகன ச
2. காபிதம் ௲௬௱௭
3. ௰க மேல் செல்லா
4. நின்ற காளயுத்தி
5. ஸு ஆடி மீ௪ உ ஸ்ரீரெங்கப்
6. ப மழவராய ரவர்கள் முத்து
7. சேருவைகாறரும் நன்னை
8. யில் கீழ்க்காட்டில் அத்த
9. கிற்றாற மீ குழி ௬௰௩
10. தெற்த்தம் பண்ணித் தாவெ
11. ர வாத்தோம் இந்த மா
12. னிய நிலத்தை ஆகாட
13. ம் பண்ணின பேர் கார
14. ாம் பசுவை கொண்
15. ண தோஷத்திலே
16. போவாற் உ

த.நா.அ. தொல்லியல் துறை　　　　தொடர் எண் : 277/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1763, கி.பி 1841 கலியுகம் 4942 |
| ஊர் | : | நன்னை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | - | ஊர்க் கல்வெட்டு எண் | : | 4 |
| அரசன் | : | - | | | |

இடம் : ஊரின் மேற்கே ஓடையில் நடப்பட்டுள்ள பலகைக் கல்.

குறிப்புரை : இக்கல்வெட்டின் காலம் தவறாகக் குறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டின் மேற்பகுதியில் சந்திரன் லிங்கம் நாமம் சூரியன் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வூர் திருமேனிநாதர் கோயில், வரதராசப்பெருமாள் கோயிலுக்கு வெங்கடாசல படையாச்சியும் வெங்கபடையாச்சியும் இலுப்பை தோப்பினைச் சிவதர்மமாகத் தானம் செய்த செய்தி இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

கல்வெட்டு :

1. உ சத்தியம் சாலியவாகன
2. சகாத்தம் ஷ ௲எ௱சுங
3. கலியகத்து ஷ சதுசூ௱
4. சயஉ செண்ணது சா
5. ர்வதாலி ஷ தையி மீ
6. உயக உ திங்கள் கிளமை
7. திசமி ரோகணி யிந்த சு
8. ப தினத்தில் நன்னையிலிருக்கு

9. ம் திருமேனிநாதர் வறதரா

10. சர் பெருமா(ா)ள் கோவில்

11. உக்கு வெங்கடாசல ப

12. டையாச்சி தி வெங்க

13. படையாச்சி யிலு

14. ப்ப தோப்பு சிவ

15. தற்மம் வ

மாவட்டம் : பெரம்பலூர்

வட்டம் : பெரம்பலூர்

ஊர் : பில்லங்குளம்

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : -

அரசன் : -

ஆட்சி ஆண்டு : -

வரலாற்று ஆண்டு : -

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : 660/1922

முன் பதிப்பு : -

ஊர்க் கல்வெட்டு எண் : 1

இடம் : ஏரிக்கரை அருகே நடப்பட்டுள்ள சூலக்கல்.

குறிப்புரை : இக்கல்வெட்டில் பொன்பரப்பின ஈஸ்வரமுடைய நாயனார் என்னும் இவ்வூர்ச் சிவன் கோயிலுக்குக் கூகையூருடையான் என்பவன் இக்குளத்தை தேவதான இறையிலியாக அளித்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ கூ
2. கையூருடை
3. யார் பொன்
4. பரப்பின ஈ
5. ஶ்வரமுடை
6. ய நாயனார் தே
7. தவதானம் இ
8. றையிலி புல்
9. லங்குளம் வ

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 175/2005

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு : | - |
| வட்டம் : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு : | 17ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | பேரளி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : | - |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | - |
| எழுத்து : | தமிழ் | | |
| அரசு : | - | ஊர்க் கல்வெட்டு எண் : | 1 |
| அரசன் : | - | | |

இடம் : சாலை ஓரம் அரிசி மில் அருகே நடப்பட்டுள்ள தூண்.

குறிப்புரை : இக்கல்வெட்டு பேரளியில் இருக்கும் மூர்த்தி கருணானந்த மடம் தண்ணீர் பந்தல் நந்தவனம் நடைகிணறு ஆகியவை தருமமாகத் தந்ததைக் கூறுகிறது.

**கல்வெட்டு :**

1. உ யீ*பர*வற
2. ஷு பிறட்டா
3. சி *மீ* யகெ பே
4. றழிலிறுக்கும்
5. மூறு(த்தி)கருணாநந்த
6. சாமியார் மடம் த
7. ண்ணி பந்தல் ந
8. ந்தவாநம் நடை
9. கிணரு யிது தரும
10. உடையம் யிதுக்கு
11. யாறுமொருத்தர்

12.விக்கிநம் தேடி

13. நால்

14. காசியிலே கெ

15. ங்கைக் கரையி

16. லே காறாம் பசு

17. வை கொண்ண

18. தோஷத்திலே

19. போவார்கள்

20. யிதை விள

21. ங்க (ை)வத்தாற்

22. க்கு மோக்ஷம்

23. அடைவர்

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 287/2005**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 2 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1180 |
| ஊர் | : | பேரளி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 464/1993 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 2 |
| அரசன் | : | மூன்றாம் குலோத்துங்கன் | | | |

இடம் : காட்டுக் கோயில் என்கிற அழகாபுரீசர் கோயில் மகாமண்டபம் வடக்குச் சுவர்.

குறிப்புரை : உத்துங்க துங்க வளநாட்டுக் குன்றக் கூற்றத்துப் பேரகழியிலிருக்கும் புத்தூருடையான் தென்னவராயன் தன் முன்னோர் கொண்டுடைய காணியில் உபானம் முதல் தூபி வரை கருங்கல்லால் கோயில் எடுப்பித்ததையும், வினாயகர், சேத்ரபாலர் முதலிய சிற்பங்களையும் செப்புத் திருமேனிகளையும் செய்து கொடுத்ததையும் இக்கல்வெட்டு கூறுகிறது. மேலும் தேவதானமாக மேலைக்கழனியில் கால்செய் நிலமும் கீழைக்கழனியில் கால்செய் நிலமும் பதினாலு அடிக்கோலால் அளந்து தரப்பட்டது என்பதையும் தெரிவிக்கிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு இரண்டாவது உத்துங்க துங்க வளநாட்டு குன்றக் கூற்றத்துப் பேரகழியிலிருக்கும் புத்தூருடையாந் தென்னவராயன்னேந் தேவதானம் இட்டபடியாவது எங்கள் பிதாக்கள் கொண்டுடைய காணியாய் வருகிற இப்பேரகழியிலே சிவலிங்கப் பிரதிட்டையும் பண்ணி உபானாதி தூபி

2. பரியந்தமாகத் திருக்கற்றளியுஞ்சாத்தி வினாயகப்பிள்ளையார் க்ஷேத்*ர*பாலப் பிள்ளையார் முதலான சிலா மூர்த்தங்களும் எழுந்தருளுவித்து திருமேனி நாயன்மாரையும் எழுந்தருளுவித்து இந்நாயனார் அழ(கிய நாயனா)ர் தேவ தானம் பதிநாலடியும் விலக்கடியுமாந கோலால் இவ்வூர் மேலைக் கழனியிற் காற் செய்யும் கீழைக் கழனியிற் காற் செய்யும் இக்கோலால்.

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 292/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம்1492, கி.பி.1570 |
| ஊர் | : | மங்கூன் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | சதாசிவராயர் | | | |

இடம் : துணை மின்நிலையம் எதிரில் பாறையில் உள்ள கல்வெட்டு.

குறிப்புரை : இவ்வூரின் பழைய பெயரான மாக்குன்றம் என்பது மருவி தற்போது மங்கூன் என்று அழைக்கப்படுகிறது. திருமுதுகுன்றம் என்று முன்பு வழங்கப்பட்ட விருத்தாசலத்தில் இருந்த மடத்துக்கு செட்டிகுளம் மும்மடி ரெட்டியார் மகன் சின்னம்ம ரெட்டியார் மற்றும் இவர் தம்பி பெத்து ரெட்டியார் மடப்புறமாக மாக்குன்றத்தைத் தாரைவார்த்து தானம் கொடுத்த செய்தியும், அந்த மடம் திருமூலர் சந்ததி அறிவானந்தர் என்பவரால் பராமரிக்கப்பட்டு வந்தது என்ற செய்தியும் இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்ரீஊது ஸதாசிவரா
2. யர் பிறுதுவி ராச்சியம்
3. பண்ணி யருளா நின்ற
4. சகாத்தம் கூசா௱கூ௰உ ன்
5. பிறமோதூத சித்தி
6. ரை மீ ந உ செட்டிகு
7. ள மும்மடி ரட்டியார் குமாரர்
8. சின்னம ரட்டியார் தம்பியார் ணனா
9. பெத்த ரட்டியார் திருமுதுகுன்

10 .ற மடத்து

11. க்கு திருமு

12. ல சந்ததி

13. அறிவானந்தர் கும்ப

14. கோணம் சித்தநாத பண்டார (அ)

15. றிவானந்தர் தம்முடைய ம

16. டப்புறமாக புத்திற

17. பரம்பரை மாக்குன்

18. றம் தாரை

19. வாத்தோ

20. ம் உ

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 293/2005

மாவட்டம் : பெரம்பலூர்

வட்டம் : பெரம்பலூர்

ஊர் : மங்கூன்

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : -

அரசன் : -

ஆட்சி ஆண்டு : -

வரலாற்று ஆண்டு : கி.பி.18-ஆம் நூற்றாண்டு

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : -

முன் பதிப்பு : -

ஊர்க் கல்வெட்டு எண் : 2

இடம் : துணை மின்நிலையம் எதிரிலுள்ள கிணற்றடியில் கிடக்கும் தூண்.

குறிப்புரை : பொம்மணப்பாடி அண்ணாமலை கவுண்டர் மகன் செல்லப்பக் கவுண்டர் என்பவர் இக்குளத்தை பராமரித்த செய்தி இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. பொம்மண
2. ப்பாடியி
3. லே யிருக்கு
4. ம் அண்ணா
5. மலை க(வு)ண்
6. டர் குமார
7. ன் செல்ல
8. ப்பக் கவு
9. ண்டர் தற்
10. ம கொள
11. த்தை பரி
12. பாலனம்
13. செய்தார்.

த.நா.அ. தொல்லியல் துறை　　　　　தொடர் எண் : 261/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 7 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1173 |
| ஊர் | : | மூங்கில்பாடி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 457/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | இரண்டாம் இராஜாதிராஜன் | | | |

இடம் : பெருமாள் கோயில் முன் நடப்பட்டுள்ள கல்.

குறிப்புரை : கல்லின் நான்கு பக்கமும் எழுத்துகள் வெட்டப்பட்டுள்ளன. மூஞ்சிப் பாடியில் காணி ஊடைய சீரன் சுத்த மல்லனான விக்கிரம சோழ மலைய குலராயன் என்பவர் இவ்வூரில் ஸ்ரீபத்மபிரிய விண்ணகர் என்னும் பெருமாள் கோயில் கட்டி திருவிடையாட்டமாக நன்செய் நிலம் ஒன்பதே முக்காலே மும்மாவரையும், இந்நிலத்து முன்பு விட்டுக் கல்வெட்டின நிலமும் நீர்வார்த்துக் கொடுத்த செய்தி இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

முதல் பக்கம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவ
2. னச் சக்கரவத்
3. திகள் ஸ்ரீ ராஜாதிரா
4. ஜ தேவற்கு யாண்
5. டு ஏழாவது ஸிங்
6. க நாயற்று அபர பக்ஷத்து
7. ப் பஞ்சமியும் வியாழக்கி
8. ழமையும் பெற்ற அசுவதி
9. நாள் வடகரை குன்றக் கூற்றமா

10. ன உத்துங்க துங்க வளநாட்டு
11. முஞ்சிப்பாடிக் காணி உடை
12. ய முஞ்சிப்பாடி உடையா
13. ன் சீரன் சுத்தமல்லனான வி
14. க்கிரம சோழ மலைய
15. குல ராயனேன் இத்தே
16. வற்கு நாலாவது இவ்வூ
17. ற்குத் திருமேற் கோயிலா
18. க நான் உகந்தருளப் பண்
19. ணின திருமுற்றத்து ஸ்ரீ
20. பத்த ப்ரிய விண்ணகர

இரண்டாவது பக்கம்

21. எம்பெருமா
22. னுக்கு நான் திரு
23. விடையாட்ட
24. மாக விட்ட நன்
25. செய் நிலமாவ
26. து இவ்வூற்குக் கி
27. ழக்கு நான் க
28. ண்டு வெட்
29. டு வித்த குள
30. த்துக் கரைக்கு
31. தெற்க்கு கரைக்கீழ்

32. . . . . தெற்கில்

33. . . . .டக்கு வ

34. . . . கு வ . . .

35. . . . ழக்கல்

36. . . . க்கு மேற்

37. கு தேவதா

38. ணப் புன்செ

39. ய்க்குக் கிழ

40. க்கு நிலம்

41. எட்டே அறு

42. மாவரையும்

43. இதன் தென்

44. மேற்குத் தேவ

45. தானத்துக்கு

46. த் தெற்கு ஆ

47. தனூர் எல்

48. லைக்கு

மூன்றாவது நான்காவது பக்கம்

49. வடக்கு வண்ணான் குழிக்கு கி

50. ழக்கு நிலம் ஒன்றரையே யிர

51. ண்டு மாவும் ஆக நிலம் ஒன்ப

52. தே முக்காலே மும்மா வரையு

53. ம் இந்நிலத்து முன்பு விட்டு

54. க் கல்வெட்டின நிலமும் இ

55. ந் நிலத்துக்குள் ளகப்பட்ட

56. நன்செயுந் திடமும் நடாப் பா

57. மும் இக்குளத்து எதிர்வாய் நீர்

58. கோவையும் அகப்படத் திருக்

59. கை மலரிலே நீர்வார்த்து திருவி

60. டையாட்டமாக விட்டேன் சீரன் சுத்

61. தமல்லனான விக்கிரமசோழ மலை

62. யகுலராயனும் இம்மூஞ்சிப்பாடி உ

63. டையார்களும் இவ்வனைவோம் இ

64. துக்கு அழிவு செய்வார் சீயாக்கினை

65. திருவிரையாக்கலும் பெருமக்க

66. ளான திருவாணை

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 262/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | 17-ஆம் நூற்றாண்டு கி.பி.1607 |
| ஊர் | : | மூங்கில்பாடி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 459/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | அரியலூர் பாளையக்காரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 2 |
| அரசன் | : | கிருஷ்ணப்ப மழவராயர் | | | |

இடம் : சிவன் கோயில் எதிரே நடப்பட்டுள்ள கல்.

குறிப்புரை : கிருஷ்ணப்ப மழவராயர் மனைவி எறம்மாள் என்பவர் இவ்வூர் சிவன் கோயில் சிதம்பரரீசுரனுக்கும் சிவகாமி அம்மைக்கும் பூசைக்காக இரண்டு கலம் விதைநெல் விதைக்கக் கூடிய பரப்பளவு கொண்ட நிலம் தானமாக கொடுத்தது பற்றி இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

**கல்வெட்டு :**

கல்வெட்டு முன்பக்கம்

1. உ ஆறுமுகம் கீல
2. க ஹு சித்திரை
3. *மீ ஸ்ரீ*உது கி
4. ஷ்ட்டணப்ப ம
5. ழவராயர் தன்
6. ன்மமாக எறம்

பக்கவாட்டில் தொடர்ச்சி

7. மாள் சிதம்பரீ
8. சுரனுக்கும் சிவக
9. ாமி அம்மைக்கு
10. ம் இருகல வி
11. ரைக்கு விட்ட
12. பூதானம்

13. யிந்த தன்மத்

14. தை பரிபூரணம்

15. பண்ணி

16. ன பே

17. ர்கள்

18. கெங்

19. கை

20. கரை

21. யிலே

22. ஆயி

23. ரம

24. கோ

25. தான

26. ம் பண்

27. ணின

28. பேறு

29. பெறு

30. வார்

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 282/2005**

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.17-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : மூங்கில்பாடி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 458/1992-93 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : அரியலூர் பாளையக்காரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 3 |
| அரசன் | : கிருஷ்ணப்ப மழவராயர் | | | |

இடம் : வெள்ளியங்குளக் கரையில் புதைந்து கிடக்கும் பலகைக் கல்.

குறிப்புரை : கிருஷ்ணப்ப மழவராயர். தர்மமாகப் பெரியகுன்றம் களப்பாள பிள்ளை மகன் திருவம்பலமுடையார் என்பவர் ஏரிவெட்டி சிவன் கோயில் சிதம்பரேசுரர்க்கும் சிவகாமியம்மைக்கும் தர்மமாகக் கொடுத்ததை இக்கல்வெட்டு குறிக்கிறது. கல்வெட்டில் ஒருபகுதியே உள்ளது.

**கல்வெட்டு :**

1. ௳ யுவ ஹூ தை மீ
2. ய ௳ கிஷ்ட்டண
3. ப்ப மழவராயர்
4. தன்மமாக
5. பெரியகுன்ற
6. ம் களப்பாள
7. பிள்ளை மகன் தி
8. ருவம்பலமு
9. டையார் தன்
10. மமாக ஏரி வெ
11. வட்டி சிதம்பரே
12. ரசுரற்கும் சிவ
13. காமி அம்மை
14. க்கும் . . . . .
15. . . . . . . . . .

த.நா.அ. தொல்லியல் துறை　　　　தொடர் எண் : 219/2005

மாவட்டம் : பெரம்பலூர்　　　　ஆட்சி ஆண்டு : -

வட்டம் : பெரம்பலூர்　　　　வரலாற்று ஆண்டு : கி.பி.1680

ஊர் : வேப்பூர்　　　　இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : 479/1992-93

மொழி : தமிழ்　　　　முன் பதிப்பு : -

எழுத்து : தமிழ்

அரசு : அரியலூர் பாளையக்காரர்　　　　ஊர்க் கல்வெட்டு எண் : 1

அரசன் : சின்ன ரெங்கப்ப மழவராயர்

இடம் : அண்ணாமலையார் கோயில் பிரகாரத்தில் கிடக்கும் பலகைக் கல்

குறிப்புரை : இவ்வூர் அண்ணாமலையார் கோயிலுக்கு சின்னரெங்கப்ப மழவராயர் என்பவர் 27 நட்சத்திர மாலை திருவிளக்குக்காக 40 குழி நிலம் மானியமாகக் கொடுத்துள்ளார். இந்நிலத்தை கோயில் தானத்தார் குருக்கள் வசம் பச்சையப்ப செட்டியார் அளித்துள்ளதையும் இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

**கல்வெட்டு :**

1. ௳ மன்மத ௵ வையாசி ௴ ஸ்ரீமது சின்னரெங்
2. கப்ப மழவராயர் வேப்பூர் அண்ணாமலையாருக்கு ந
3. க்ஷத்திர விளக்குக் கட்டளைக்கு விட்டது சின்
4. னமொறை நஞ்சை நிலம் குழி ௪௰ நில மானியம்
5. தாராதெத்தமாக னாம் விட்டது இந்த நில மான்னி
6. யம் குழி நாப்பது பச்சையப்ப செட்டியார் அவர்கள்
7. அண்ணாமலையாருக்கு நக்ஷத்திர விளக்கு கட்டளை
8. தந்ம்மத்துக்கு ஆசந்த்ராற்கமாக சந்திராதித்திய
9. ாள் உள்ள மட்டுக்கும் இந்த நிலமான்னியம் நடப்பிச்சு
10. க்கொள்ள கடவேராகவும் வேப்பூர் குடியான பே
11. ர் கோயில் தானத்தார் குருக்கள் இந்த தற்ம்மத்துக்கு யா

12. தாமொருவர் விகாதம் பண்ணினவன் சிவத்துரோக

13. ங் குருத்துரோகம் பண்ணிணவன் தோஷத்திலேயும் ந

14. க்ஷத்திர மாலை திருவிளக்கு இருவத்தேழையும் நிறு

15. த்தின தோஷத்திலேயும் போகக் கடவனாகவும் மா

16. ணியம் இரணப்ப அய்(ய)ன் பணி விடை

17. அண்ணாமலையா துணை.

த.நா.அ. தொல்லியல் துறை    தொடர் எண் : 207/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 2 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1218 |
| ஊர் | : | வரகுபாடி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | மூன்றாம் இராஜராஜன் | | | |

இடம் : சிவன்கோயில் வளாகத்தில் கிடக்கும் பலகைக் கல்.

குறிப்புரை : குலோத்துங்க சோழ வாணகோவரையன் என்னும் குறுநில மன்னன் பாண்டியராயன் என்ற மற்றொரு குறுநில மன்னனோடு போரிட்டபோது போரில் தமக்கு உதவி செய்த ஒளியன் பெற்றான் என்ற வீரனுக்கு கோயில் நிலங்களைத் திருநாமத்துக் காணியாக அளித்த செய்தி இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீஇராஜராஜதேவற்கு யாண்டு உ வது திருப்பழனத்து உடையார் செ
2. தாண்டைமானார் பூசற் செய்ய விட்டுக்கிடு இருந்த இடத்து இராவினையாகப் பாண்
3. டியராயன் வந்து வளைந்தவிடத்து ஒளியன் பெற்றான் ஆரியனை வெட்டிப்
4. பிடித்துக்கிடு வந்து தொண்டைமானாரோடுங்(கூட) குலோத்துங்க வாணகோவ
5. ரையர் சீபாதத்தேய் கண்ட இடத்து இவனுக்கு தண்டேறு வரிசையுங் குடுக்கப் புக்
6. க இடத்து இவ் ஒளியன் பெற்றான் தெண்டனி(ட்டு) அடியேனுக்கு இவை வே
7. ண்டாம் தண்டைலையிற் பொய்(கை ஈஸ்)வரமுடைய நாயனார் கோ

8. யில் திருக்கற்றளி சாத்த அன்நாயநார் திருநாமத்துக் காணியில் பண்
9. டாரத்துக் கிறுக்கிற சீகாரியப்பேறு தூதவரி அடியேனுக்குத் தந்தருள வே
10. வனுமென்று விண்ணப்பஞ் செய்ய அப்போதேய் புரவரி முதலிகள் நால்வரு
11. ம் எழிதிய் எழுத்திட்டு திருவெழுத்துஞ்சாத்தி திருமுகப் பிரசாதம் பெற்று விடை கெ
12. ாண்டு போந்தேன் ஒளியன் பெற்றாநேன் இந்த திருநாமத்துக் காணிக்கு ந
13. ன்செய் புன்செய் நத்தம் இதுக்கு விலங்கல் சொல்லுவான் தங்களம்மைக்கு
14. த் தாநே மிணாளன் தன் உடப் பிறந்தாள் முந்தானை பிடிச்சாநாவான் இதுக்கு வி
15. லங்கல் சொல்லாதவன் சீபாதமென் தலை மேலேய் -

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : 21 |
| வட்டம் | : பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : கி.பி.1211 |
| ஊர் | : வரகூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : - |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : - |
| எழுத்து | : தமிழ் | | |
| அரசு | : பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : 1 |
| அரசன் | : முதலாம் சடாவர்மன் குலசேகரதேவர் | | |

இடம் : சிவலோகநாதர் கோயில் கருவறை தெற்குச் சுவர்.

குறிப்புரை : முன்னாளில் அம்மையாழ்வானான வரகூர் பெருங்கொல்லனால் செய்து அளிக்கப்பட்ட சூல தேவர் கலகத்தில் காணாமல் போய்விட்டதால் மற்றொரு சூலதேவரை அவருடைய பேரன் உதையனான பெரிய நாயகக் கொல்லன் வழித்துணையான் வரகூர்ப் பெருங்கொல்லன் மீண்டும் செய்து கொடுத்த செய்தி இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. கோற்சடை பன்மரான குலசேகர தேவற்க்கு யாண்
2. டு உ௰க வது முன்னாள் என்பாட்டன் அம்மையாழ்வா
3. னான வரகூர்ப் பெருங்கொல்லன் எழுந்தருளுவி
4. த்த திருச்சூலதேவர் கலகத்திலே எடுப்புண்டு பே
5. ாகையில் உதையனான பெரிய நாயகக் கொல்ல
6. ன் வழித் துணையான் வரகூர்ப் பெருங்கொல்ல
7. ன் திருச்சூல தேவரை எழுந்தருளிவித்தேன்

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 164/2005

மாவட்டம் : பெரம்பலூர்

வட்டம் : பெரம்பலூர்

ஊர் : வெண்பாவூர்

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : -

அரசன் : -

ஆட்சி ஆண்டு : -

வரலாற்று ஆண்டு : 16-ஆம் நூற்றாண்டு

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : -

முன் பதிப்பு : -

ஊர்க் கல்வெட்டு எண் : 1

இடம் : சொர்ணபுரீஸ்வரர் கோயில் இராஜகோபுரம் உட்புறம் இடது பக்கச் சுவர்.

குறிப்புரை : பொன்பரப்பிநாத சுவாமி கோயில் திருச்சுற்று மாளிகையை ஸ்ரீலட்சம ரெட்டியார் என்பவர் தர்மமாகக் கட்டிய செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. பிறையொப்ப(தி) வருஷம் தையி மாத
2. ம் ரு ஹ வெண்ம்(ப)ார் பொன்
3. பரப்பினாத சுவா(மி) திருசுத்து
4. மாளிகை ஸ்ரீ(லஷ்)ம ரட்டி
5. இட்ட தர்ம(ம்)

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 165/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | 16-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | வெண்பாவூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | - | ஊர்க் கல்வெட்டு எண் | : | 2 |
| அரசன் | : | - | | | |

இடம் : சொர்ணபுரீஸ்வரர் கோயில் இராஜகோபுரம் உட்புறம் இடது பக்கச் சுவர்.

குறிப்புரை : வினைதீர்த்தா பிள்ளை மகன் குமாரன் வினைதீத்தாபிள்ளை உச்சிக்கால கட்டளைக்கு பெரியேரி பகுதியில் 500 குழி நிலமும், 200 குழி புஞ்சை நிலமும், திருவிளக்குக் கட்டளைக்கென 300 குழி நஞ்சை நிலமும் 200 குழி புஞ்சை நிலமும் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. (பெண்ணை சீர்மையில் ஏமப்பேறு)
2. வினை தீத்தா பிள்ளை குமாரன் வினை தீத்தா
3. பிள்ளை உச்சிக் கால கட்டளை(க்கு) பெரி ஏரி பிற்
4. கரையில் விட்ட நிலம் நஞ்சை குழி ரூா புஞ்சை
5. விரை குழி உா திருவிளக்கு உபையம் நஞ்சை குழி ௩ா
6. (புஞ்சை விரை குழி உா இந்த தற்மம் வருஷாந்)
7. திரமாக சந்திர சூரியாதித்தவரை நட
8. க்க கடவோராகவும் இதுக்கு யா
9. தாமொருவர் அழிவு தேடினவன்
10. கெங்கை கரையிலே காராம் பசுவை கொன்
11. ன தோஷத்திலே போக கடவனாகவும்.






சுடுமண் முத்திரை
பேரூர்



சுடுமண் அகல்விளக்குகள்
பேரூர்



அகழாய்வுக்குழி
பேரூர்



பண்டையக் கால்வாய்ப் பகுதி
கண்ணனூர் (சமயபுரம்)



செங்கற்தரைப்பகுதி மற்றும் கிணறு
சேந்தமங்கலம்



செம்பு முத்திரை
சேந்தமங்கலம்



சுடுமண் புகைப்பான்கள்
திருக்கோயிலூர்



நுண்கற்கருவிகள்
திருத்தங்கல்

த.நா.அ. தொல்லியல் துறை — தொடர் எண் : 168/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 14 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1230 |
| ஊர் | : | வெண்பாவூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 5 |
| அரசன் | : | மூன்றாம் இராசராசன் | | | |

இடம் : சொர்ணபுரீஸ்வரர் கோயில் கருவறை மேற்குத் தெற்குக் குமுதம்.

குறிப்புரை : பொன்பரப்பின ஈசுவரமுடைய நாயநார் என்னும் இச்சிவன் கோயிலுக்கு நிமந்தங்களுக்கும், திருப்பணிக்குமாக இறையிலியாக 11 ½ வேலி நிலம் வழங்கப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது.

கல்வெட்டு:

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ இராசராச சோழ தேவற்கு யாண்டு ய௪ வது உடையார் பொன்பரப்பின ஈசுவர
2. முடைய நாயநார் தேவதான நன்செ நிலத்தில் பலபடி நிமந்ததுக்கும் திருப்பணிக்கும் இறையிலி விட்ட நன்செ நி(ல)
3. ம் ஒன்றரையும் புன்செ நிலம் பத்து வேலியும் திருமுகப்படி
4. பின்பு உயரு வது காமையச் சாகாணி சிங்கண்ணன் இறையிலியாக இட்ட புன்செ நிலம் ஒரு வேலியும்

த.நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் : 169/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 20 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1236 |
| ஊர் | : | வெண்பாவூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 6 |
| அரசன் | : | மூன்றாம் இராசராசன் | | | |

இடம் : சொர்ணபுரீஸ்வரர் கோயில் அர்த்தமண்டபம் தெற்குச் சுவர்.

குறிப்புரை : வெம்பாரூர் ஊரவரும் நகரத்தாரும் ஒன்று சேர்ந்து இவ்வூர் பொன்பரப்பின ஈசுவரமுடைய நாயனார்க்கும், தாயிலும் நல்ல விண்ணகர எம்பெருமானுக்கும் அளித்த கொடை பற்றிக் கூறுகிறது.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஶ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஶ்ரீராச
2. ராச தேவற்கு யாண்டு உ௰ வது இயா(த)
3. வராயன் ஓலை வெம்பாரூரவரும் நகரத்(த)
4. ாரும் கண்டு தங்களூர் மிளகு தரகு ஆயம் உடை(ட)
5. யார் பொன்பரப்பின ஈசுவரமுடைய னா(ய)
6. னார் திருப்பணிக் கிருகூறும் தாயிலு நல்ல விண்
7. ணகர ஆழ்வார் திருப்பணிக் கொரு கூறும்
8. குடுத்தேன் இப்படிக் கிவை யாதவராயந் எ
9. (ழுத்)து இவ்வோலை எழுத்து சோழ பாண்
10. (டிய) வேளாந்

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 170/2005

மாவட்டம் : பெரம்பலூர்

வட்டம் : பெரம்பலூர்

ஊர் : வெண்பாவூர்

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : -

அரசன் : -

ஆட்சி ஆண்டு : -

வரலாற்று ஆண்டு : 12-ஆம் நூற்றாண்டு

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : -

முன் பதிப்பு : -

ஊர்க் கல்வெட்டு எண் : 8

இடம் : வரதராஜ பெருமாள் கோயில் வளாகத்தில் கிடக்கும் பலகைக் கல்

குறிப்புரை : இது வணிகக்குழு கல்வெட்டாகும். கல்வெட்டின் மேற்பகுதியில் விளக்கு, கெண்டி, கலப்பை, உடுக்கை ஆகிய உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் 'தாயிலும் நல்ல பெருமான்' என்ற பெயர் சிவன் கோயிலுள்ள மூன்றாம் இராசராசனின் 20 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் 'தாயிலும் நல்ல விண்ணகர ஆழ்வார்' என்று குறிப்பிடப் படுகிறது.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ சித்தி
2. ரமேழி மலை மண்டல
3. த் தேசி விண்ணகர்
4. தாயிலு நல்ல பெ
5. ருமாள்

த.நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் : 241/2005

மாவட்டம் : பெரம்பலூர்
ஆட்சி ஆண்டு : 2

வட்டம் : பெரம்பலூர்
வரலாற்று ஆண்டு : கி.பி. 1180

ஊர் : கோயில்பாளையம்
இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : 445/1992-93

மொழி : தமிழ்
முன் பதிப்பு :

எழுத்து : தமிழ்

அரசு : சோழர்
ஊர்க் கல்வெட்டு எண் : 1

அரசன் : மூன்றாம் குலோத்துங்கன்

இடம் : தோளீஸ்வரர் கோயில் மகாமண்டபம் வடக்கு ஜகதி.

குறிப்புரை : முடிகொண்ட சோழ வளநாட்டுத் துண்ட நாட்டு தேனூர் வரசரித ஈஸ்வரமுடைய நாயனார்க்கு துண்ட நாடுடையான் ஏகவாசகன் குலோத்துங்கனான பிள்ளை வாண கோவரையர் என்பவர் வைத்த திருநுந்தா விளக்கு பற்றிக் கூறுகிறது.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இரண்டாவது மீந நாயற்று அபரபக்ஷத்து பஞ்சமி

2. யுந் திங்கள்கிழமையும் பெற்ற ஆநி(ழ்)த் திருநாள் வடகரை முடிகொண்ட சோழ வளநாட்டுத் துண்ட னாட்டுத் தேநூர் வரசரித ஈஶ்வரமுடைய நாயநா

3. ர்க்கு துண்ட நாடுடையான் ஏகவாசகன் குலோத்துங்கராந பிள்ளை வாணகோவரையர் வைத்த திருநந்தாவிளக்கு ஒந்றுக்கு உபையமாக வைத்துத் . . . . இக்கோயிலி

4. ல் காணி உடைய சிவப்ராஹ்மணந் (வறஸைக) சோழந்நாந நாற்பத்தெண்ணாயிர பட்டநும் சோமந் சிவவாக்கிய தேவனும் . . . . . .

5. நாயகநும் கயிலாயந் திருவீரட்டாநமுடையாநும் திருவனந்தசேகரனும் திருப்புறம்பிய முடையாநும் தேவன் சேந்தநும் அருமொழி தேவ

6. னனையும் தேவநாயகநும் தேவந் ஆதியும் இவ்வனைவோம் இ விளக்கொன்று சந்திராதித்தவர் செலுத்த ஸம்மதித்தோம் இவ்வனைவோம் இவ

7. ன் சமைந்து தேவர்கந்மி நாற்பத்தெண்ணாயிர பட்டந் எழுத்து தேவர்கந்மி திருச்சிற்றம்பல பட்டந் எழுத்து ஆதிநாயகப் பட்டந் எழுத்து தாளணஞ்சேகர பண்டிதர் எழுத்து)

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 242/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1070 |
| ஊர் | : | கோயில்பாளையம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 449/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 2 |
| அரசன் | : | முதலாம் குலோத்துங்கன் | | | |

இடம் : தோளீஸ்வரர் கோயில் அர்த்தமண்டபம் வடக்கு ஜகதி.

குறிப்புரை : மெய்க்கீர்த்தியின் தொடக்கம் மட்டும் உள்ளது.

**கல்வெட்டு:**

1. ஸ்வஸ்திஸ்ரீ புகழ்மாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் நிலவ மலர்மகள் புணர உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி வில்லவர்

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 243/2005

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | 37 |
| வட்டம் | : பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : கி.பி. 1106 |
| ஊர் | : கோயில்பாளையம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : 447/1992-93 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : - |
| எழுத்து | : தமிழ் | | |
| அரசு | : சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : 3 |
| அரசன் | : முதலாம் குலோத்துங்கன் | | |

இடம் : தோளீஸ்வரர் கோயில் அர்த்தமண்டபம் தெற்கு ஜகதி.

குறிப்புரை : முடிகொண்ட சோழ வளநாட்டுக் காரைக்காட்டுத் துண்ட(நாட்டு) தேனூர் வரசரித ஈஸ்வரமுடையார்க்கு இறையிலியாக விட்ட செய்தியும் சில வரிகள் வசூலித்துக் கொள்ள வழங்கப்பட்ட உரிமைகள் பற்றியும் கூறுகிறது. இக்கல்வெட்டு மூலம் 20 மா என்னும் பொன் ஒரு மாடைக்குச் சமம் எனத் தெரிகிறது.

## கல்வெட்டு:

1. ஸ்வஸ்திஸ்ரீ புகழ்மாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் நிலவ மலர்மகள் புணர உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி வில்லவர் நிலைகெட மீனவர் குலைதர ஏனை மன்னவர் யிரியலுற்று யிரிதரத் திக்கனைத்துந் தந் சக்கர நடாத்தி வீர*ஸிம்ஹாஸ*நத்து அவனி

2. முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய கோராஜகேஸரி *வந்*மரான சக்கரவத்திகள் ஸ்ரீகொலோத்துங்க சோழ ஷேவற்கு யாண்டு ௩௰௭ ஆவது நாள் ௨௱௨௰௧ ஒருராய்க் கூடினபடிக்கும் இறைஇலி இட்டபடிக்கும் வாணகோ(கோ) வரையர் எடுப்பித்த முடிகொண்ட சோழ வளநா

3. ட்டுக் காரைக் காட்டுத் துண்டத்துத் தேநூர் *வரசரித ஈஸ்வர*முடைய *உஹா*ஷேவற்கு முந்நுடையாரும் பழம்படியாரும் ௩௰௭ ஆவது முதல் தவிர்த்து *வரசரி*தநல்லூரெந்நும் பேரால் இத் தேவர்க்கு வேண்டும் நிமந்தங்களுக்கு இறுப்பதாக ௩௰௭ஆவது முதல் அந்தராய முட்பட தே

4. வதாந இறையிலி இட்ட உகளூர்க் கூற்றமான தேநூர் வாட்கை ஆதநூர் மாடை ௩௰௯ வ ௯ முப்பத்தொந்பதேகாலே நாலு மா சித்திரநல்லூர் மாடை யஇவப் பத்தரையே ஒரு மா ஆகமாடை ௫௰ ஐம்பதும் வரசரிதநல்லூரெந்நும் பேரால் இவை புரவரி திணைக்களத்து முகவெட்டி பூதங்

5. குடையாநெழுத்து இவை வெளயூர் கிழவ நெழுத்து இவை புரவரி திணைக்களத்து முகவெட்டி பல்லவந் மூவேந்த வேளாநெழுத்து இவை புரவரி திணைக்களத்து முகவெட்டி பிடவூர் உடையானெழுத்து இவை புரவரி திணைக்கள நாயகம் ஆலத்தூருடையா னெழுத்து இவை புரவரி திணைக்களத்து முகவெட்டி வரகூருடையாநெழுத்து இவை பிடவூர் வேளாநெழுத்து இவை வெள்ளூருடையானெழுத்து

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 244/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 4 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1167 |
| ஊர் | : | கோயில்பாளையம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 448/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 4 |
| அரசன் | : | இரண்டாம் இராஜாதிராஜன் | | | |

இடம் : தோளீஸ்வரர் கோயில் மகாமண்டபம் வடக்கு ஜகதி.

குறிப்புரை : சேந்தன் ஆதித்தனான இராஜராஜ வங்கார முத்தரைய தேவர் என்பவர் தேனூர் வரசரித ஈஸ்வரமுடையார் கோயிலுக்கு பதினைந்து சந்தி விளக்குகள் எரிக்க கொடுத்த கொடையைப் பற்றிக் கூறுகிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ *திரிபுவனச்* சக்கரவத்திகள் ஸ்ரீ*இராஜாயிரா*ஜதேவற்கு யாண்டு நாலாவது சேந்தந் ஆதித்தநான *இராஜராஜ* வங்கார முத்தரயதேவன்
2. தேனூர் வரசரித ஈ*ஶ*வரமுடைய நாயநார் கோயிலில் ஸ்ரீ மா*ஹேஶ*வர கண்காணி செய்வார்களும் தேவகந்மி கோயிற் கணக்கநுங் கண்டு இன்ந
3. ரயநார் கோயிலில் வைத்த சந்தி விளக்குப் பதினைஞ்சு இ விளக்கு பதினைஞ்சுக்கும் இவ்வூரில் தேவதானமாக நன்செய் புன்செய்யாலும் (வந்த பாடிகாவல் கெ)
4. (ரண்டு விளையிலும் விளையாவிடிலும் வையம் சந்திராதித்தவல் இவ்விளக்கு பதிநஞ்சும் எரிக்க கடவதாக சொந்நேன் இப்படியை பிள்ளைகண்ட ராஜபன்மற்கு சொல்
5. லி இப்படி கல்வெட்டிப் பண்ணுவித்த இப்படிக்கு இவை வங்காரமுத்தரயந் எழுத்து இவை எதிரிலிசோழ மூவேந்த வேளான் எழுத்து.)

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 245/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 11 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1199 |
| ஊர் | : | கோயில்பாளையம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 446/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 5 |
| அரசன் | : | மூன்றாம் குலோத்துங்கன் | | | |

இடம் : தேனீஸ்வரர் கோயில் மகாமண்டபம் தெற்குச் சுவர்.

குறிப்புரை : தேனூர் வரைசரித ஈஸ்வரமுடையாற்கு இவ்வூர் காணி உடைய துண்டராய பந்மன் திருவிராடன் குன்றந்தேவி குலோத்துங்க சோழியர் என்ற பெண்மணி மகா ஆடிப்பூரம் நாச்சியாரை எழுந்தருளிவித்தது பற்றியும், சிவபிராமணர்கள் விளக்கெரிக்க சம்மதித்து அவர்கள் கொண்ட காசு பற்றியும் விளக்குகிறது.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீ மதுரை கொண்டருளிய குலோ
2. த்துங்க சோழ தேவற்கு யாண்டு பதினொந்றாவது நாயற்றுக் கிழமை (பெற்)
3. ற பூசமும் அமாவாசியான ஆடியந்திதி அந்று வடகரை முடிகொண்ட சோழ வள
4. நாட்டு மேல்காரைகாட்டு துண்டநாட்டு தேநூர் உடையா(ர்) வரைசரித ஈசுவரமுடைய நாய
5. நார்க்கு இவ்வூர் காணி உடைய துண்டராய பந்மந் திருவிராடானந் குன்றந்தேவி குலோத்துங்க
6. சோழியர் மஹாதி திருவாடிப்பூரம் நாச்சியாரை எழுந்தருளிவிக்க இக்கோயில் காணி உடைய
7. ய சிவப் பிராமணரில் திருவேகம்பம் திருநட்டப் பெருமாளும் . . . . . சந்திரசேகரநு

8. ம் ஆறு . . ளிக்கக் கடவோமாக சம்மதித்து உபையத்து கொடுத்தோம் இவ்

9. வநைவோம் கயிலாயமுடையான் அருமொழி தேவநேந் மேற்படியார் வசம் நாந் சந்தி விளக்கொந்றுக்கு

10. (உபையத்துக்கு நாந் கைக்கொண்ட காசு முப்பத்து இரண்டும் கைக் கொண்டு கல்வெட்டி வித்து)

11. திருவாடிப் பூரத்துக்கு சிவ பிராமணர்

12. போதாதெந்க பிந்பு மேற்படியார் சிவப்பி

13. ராமணர் பக்கல் குடுத்த கா . . .

த.நா.அ. தொல்லியல் துறை

தொடர் எண் : 246/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1418 கி.பி.1496 |
| ஊர் | : | கோயில்பாளையம் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 453/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | விஜயநகரர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 6 |
| அரசன் | : | அப்பாச்சியப்பன் (பிரதிநிதி) | | | |

இடம் : சோழீஸ்வரர் கோயில் - மகாமண்டபம் தென்புறச்சுவர் ஓரம் நிறுத்தப்பட்டுள்ள இரு பலகைக் கற்கள்.

குறிப்புரை : விஜயநகர மன்னரின் பிரதிநிதியான அப்பாச்சியப்பன் என்பவர் தேனூர் கிராமம் முழுவதையும் தோளீஸ்வரசாமி கோயிலுக்குத் திருப்பணி மானியமாக வழங்கியுள்ளதை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

**கல்வெட்டு :**

முதல் பலகை

1. உ சிவமயம்
2. சொஷ்த ஸ்ரீ சாலிவாக
3. ன சகாற்தம் ௧௪௱
4. ௰௮ செல்லா நின்ற
5. பிறப ஷு வையாசி மீ
6. ௰௫௨ ஸ்ரீமது ராயர் காரி
7. யத்துக்கு கற்தராகிய அப்
8. பாச்சியன் பண்ணிக் குடு
9. த்த புண்ணிய பாகம்
10. ஸ்ரீமது தோளீசுபர ச

11. ாமி கோவிலுக்கு நா
12. னே தேனூர் யெல்லை
13. க்குக் கிழக்கு துங்க
14. புரம் யெல்லைக்கு தெ
15. ற்க்கு நமங்குண யெல்
16. லைக்கு மேற்கு காடூர் ெ
17. யல்லைக்கு வடக்கு
18. யிந்த நான்கு யெ
19. ல்லையுள் திருப்பணி
20. மானியமாக சே
21. த்த படியினாலே ச
22. ந்திராதித்தர் வரை

இரண்டாவது பலகைக் கல்

23. க்கும் அனுபவித்துக்
24. கொள்ளவும் யிந்த ம
25. ானியத்தை பரிபால
26. னம் பண்ணின பேர்க
27. ள் கெங்கைக் கரையி
28. லே ஆயிரங் கோதான
29. பலனும் ஆயிரஞ் சி
30. வலிங்கப் பிரதிஷ்
31. டை பண்ணின ப
32. லனும் பெறுவார்
33. க(ள்) யிந்த தற்மத்து
34. க்கு அகிதம் பண்ணி
35. ன பேற்கள் கெங்
36. கைக் கரையிே
37. ல ஆயிரங் காராம்
38. பசுவைக் கொ
39. ண்ண தோழத்திே
40. ல போகக் கடவ
41. ராகவும்

த.நா.அ. தொல்லியல் துறை　　　　தொடர் எண் : 248/2005

மாவட்டம் : பெரம்பலூர்

வட்டம் : பெரம்பலூர்

ஊர் : கோயில்பாளையம்

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : சோழர்

அரசன் : இரண்டாம் இராஜாதிராஜன்

ஆட்சி ஆண்டு : -

வரலாற்று ஆண்டு : கி.பி. 1170

இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை : 454/1992-93

முன் பதிப்பு : -

ஊர்க் கல்வெட்டு எண் : 8

இடம் : இராஜகோபுரம் நுழைவாயில் வலதுபுற நிலைக்கால்.

குறிப்புரை : இக்கோபுரத்தையும், திருமாளிகையையும் துண்டநாடுடையான் திருவுடை அடிகளான துண்டராயபன்மன் ஆரியவாயன் என்பவன் செய்துள்ளான் என்பதை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஶ்ரீ துண்ட
2. நாடுடையாந்
3. திருவுடை அ
4. டிகளான துண்
5. டராய பந்ம
6. ந் ஆரியவாய
7. ந் செய்வித்த
8. திருக்கோபுரம்
9. திருமாளிகை
10. யும் செய்வித்த
11. ாந் ௨

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 283/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | பெரம்பலூர் | ஆட்சி ஆண்டு | : | 3 |
| வட்டம் | : | பெரம்பலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1169 |
| ஊர் | : | குளத்தூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 455/1992-93 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : | இரண்டாம் இராஜாதிராஜன் | | | |

இடம் : சௌந்தரேஸ்வரர் கோயில் கருவறை மேற்கு குமுதம்.

குறிப்புரை : வடகரை உத்துங்க துங்க வளநாட்டு குன்றக் கூற்றத்து குளத்தூர் உடையானான இராஜேந்திர சோழ வைகாவிளங்கோவின்படியான் இக்கோயில் கல்படை (திருப்பணியில்) பாதி செய்தான் என்று கூறுகிறது.

கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ இராஜாதிராஜ தேவர்க்கு யாண்டு ௩ ஆவது வடகரை உத்துங்க தொங்க (வளநாட்டு) குன்றக் கூற்றத்து குளத்தூர் இக்கு(ள)

2. த்தூருடைய உடையாநான ராஜேந்திர சோழ வைகா விளங்கோவிந்ப டியா(ன்) திரு . உடையான் இப்படையில் பாதி செய்தான்.

